

# ஜெயலலிதா தடை எவ்வளவு காலம்?



'தோற்கப் போவது....'

## 'ஜெயலலிதா தடை' எவ்வளவு காலம்?

எம். ஜி. ஆரைப் போல் விசித்திரமான அரசியல் கட்சித் தலைவரை உலகத்தின் எந்த மூலையிலும் தேடிப் பிடிக்க முடியாது. அதற்குக் கடைசி உதாரணம், ஜெயலலிதா விவகாரத்தில் போடப்பட்டிருக்கும் தடை. எந்த ஓர் உறுப்பினராவது கட்சித் தலைமையின் அதிருப்திக்கு உள்ளானால், சம்பந்தப்பட்ட நபரைக் கட்சியிலிருந்து நீக்குவார்கள்; அல்லது சஸ்பெண்ட் செய்வார்கள். ஜெயலலிதா, தலைவரின் அதிருப்திக்கு உள்ளானால் அப்படித்தானே ஏதாவது ஒரு நடவடிக்கை எடுத்திருக்க வேண்டும்? இப்படியா, சிறுபிள்ளைகள் சண்டை போடும் போது 'அவனோடு நான் டூ!... நீங்களும் பேசாதீங்க' என்று கூறுவது போல்—'ஜெயலலிதாவிடம் யாரும் பேசாதீர்கள்' என்று உத்தரவிடுவார்? இதுதான் எம். ஜி. ஆர். ஸ்டைல்!

இந்தத் திடீர் உத்தரவுக்குக் காரணம் என்ன? ஆளுக்கு ஆள் ஒவ்வொரு காரணம் சொல்கிறார்கள். ஆனால் எம். ஜி. ஆரைத் தவிர வேறு யாருக்கும் உண்மைக் காரணம் தெரியாது. இந்தத் தடை எது வரைக்கும் இருக்கும்? அடுத்த ஏப்ரல் வரை! அப்போதுதான் ஜெயலலிதாவின் ராஜ்ய சபை எம். பி. பதவி முடிகிறது! மீண்டும் அவர் எம். பி. ஆக மாட்டார்! பின் சென்னையின் முதல்வர் காலைச் சுற்றிக் கொண்டுதானே இருந்தாக வேண்டும்?

இத்தனை குழப்பத்துக்குப் பின்னரும் 'ஜெ' கட்சி அலுவலகத்துக்குப் போய் வருவதுதான் வேடிக்கை!

## ஈழப் பிரச்னை எம். ஜி. ஆரைப் பாதிக்குமா?

அநேகமாக எம். ஜி. ஆர்., புலிகளைக் கைகழுவி விட்டார் என்றே தெரிகிறது. ஆனால் பகிரங்கமாகத் தம் கோபத்தை வெளிப்படுத்த விரும்பவில்லை. காரணம் 'தமிழின விரோதி' என்ற பட்டத்தை வாங்கிக் கொள்ள விரும்பாததுதான்! அதே சமயம், விடுதலைப் புலிகளைக் கைகழுவுவதால் தமக்கு அரசியலில் எந்தப் பாதிப்பும் வராது என்றும் அவர் உறுதியாக நம்புகிறார்.

இதைப் பற்றி ஒரு மூத்த அ. தி. மு. க. பிரமுகர் சொன்னார்: "சார், ஈழத் தமிழர் பிரச்னை என்பது தமிழ்நாட்டில் பத்திரிகைக்காரர்களின் பிரச்னையே தவிர மக்கள் பிரச்னை அல்ல. சாதாரண மக்களுக்கு அன்றாட வாழ்வைப் பற்றித்தான் கவலை. அந்த ஏழை மக்களுக்கு நாங்கள் சத்துணவு போடுகிறோம். மிதியடி கொடுக்கிறோம். இலவச வேட்டி, துணிமணி கொடுக்கிறோம்... அதனால் அவர்கள் எங்கள் பக்கம் தான் இருப்பார்கள்!"

## 'வீட்டு'க்குள் சண்டை!

வீட்டு வசதி வாரியத் தலைவர் மணிமாறனுக்கும் அந்த இலாகா அமைச்சர் திருநாவுக்கரசுக்கும் ஆகவில்லை!

அமைச்சர் தரும் உத்தரவுகளையும் யோசனைகளையும் வாரியத் தலைவர் பொருட்படுத்துவதில்லை.

இதனால் ஒருவரையொருவர் 'கிளப்ப' கடுமையாக முயற்சி செய்கிறார்கள்.

தோற்கப் போவது அமைச்சர்தான் என்கிறார்கள்.

## பழைய செய்தியும் புதுத் தகவலும்

ஐ. வி. நிலைய வாசல் வரை சென்ற 'எம். பி.'யான ஜெயந்தி நடராஜன் நிலையத்திற்குள் நுழையாமல் சென்ற செய்தியைத் தெரிவித்திருந்தோம் அல்லவா? அதற்கான காரணம் இப்போது தெரிய வந்திருக்கிறது!

அன்று ஜெயந்தி அம்மையார் நிலைய வாசல் நிகழ்ச்சிக்கு வருகிற விஷயம் நிலையத்தாருக்கே தெரியாதாம்! நிலைய அதிகாரிகளின் அழைப்போ, அவர்களுக்கு முன் தகவலோ, இன்றி ஒரு பிரமுகர் வந்து போயிருக்கிறார்!

இது என்ன மரபு?

— ஒட்டக்கூத்தன் ஜி

படங்கள்: சுபா





# மனிதன்

மூகலாயச் சக்கரவர்த்தி ஔரங்கசீப் பிற்கு நடமாடும் உதாரணமாகத் திகழ்கிறார் ரகுவரன். பெண்டாட்டி கழுத்தைப் பிடித்து நெரித்து க்ளோஸ் பண்ணுகிறார். தட்டிக் கேட்ட தங்கையைச் சிறையில் தள்ளுகிறார். பெற்ற தந்தை + தந்தையின் சிநேகிதர் என்று சப்ஜாடா தானே நிர்மாணித்த சிறையில் போடுகிறார். ஆனாலும் ரகுவரனுக்கு வெஜிடேரியன் ரோல்தான் ஒத்துவரும் போல. இந்த நான்—வெஜிடேரியன் பாத்திரத்தில் மனிதரைப் பார்க்கும் போது சிரிப்புத்தான் வருகிறது.

அமாவாசையில் பிறந்த சிறுவன் திருடனுகப் பிறப்பான் என்ற மூடநம்பிக்கைதான் கதையின் அஸ்திவாரம். அஸ்திவாரமே கான்க்ரீட்டில் இல்லாமல் களிமண்ணில் அமைந்து விட்டதா, கதைக் கட்டிடத்தின் பாடு கொஞ்சம் தள்ளாட்டம்தான்.

ரஜினி சிறுவனுல் அடிபடும் ஆசிரியர் பொக்கென்று உயிரை விட்டு விட்டார் என்றே வைத்துக் கொள்வோம். அதற்காக சிறுவனை மத்திய சிறைச் சாலையில் ஆயுள் தண்டனைக் கைதியாகவா அனுப்பி வைப்பார்கள்? போகட்டும். ரஜினி ஜெயிலில் இருந்து வருகிறார். ரவுடிகளின் பிடியில் இருந்து சண்டை போட்டு மாதுரியைக் காப்பாற்றுகிறார். ரவுடிகளுடன் சண்டை போட்டு ஜி.சீனிவாசனைக் காப்பாற்றுகிறார். ரவுடிகளிடம் சண்டை போட்டு ரூபிணியைக் காதலிக்கிறார். ரவுடிகளிடம் சண்டை போட்டுக் கடைசியில் ஜி.சீனிவாசன் அண்டு கோ, சோ+வினுசக்ரவர்த்தி, ரூபிணி என்று எல்லோரையும் ஒட்டு மொத்தமாகக் காப்பாற்றுகிறார். நடு நடுவே ரூபிணியுடன் டூயட்.

சமாதானமா, எல்லோரும் செத்தப்புறம் தான்யா சமாதானமும் அமைதியும் என்று இலங்கைப் பிரச்னையைத் தொடும் சோ, இந்தப் படத்தில் அங்கங்கே தன்னுடைய அரசியல் நையாண்டிகளைச் சேர்த்துக் கொண்டிருப்பது புன்முறுவல்களைத் தோற்றுவிக்கிறது.

ரகுவரன் எப்படி அவ்வளவு பெரிய வெடிகுண்டு தொழிற்சாலையை ஒற்றை ஆளாக நிர்மாணித்தார்?

ஸ்ரீவித்யா, ஜெய்கணேஷ் பரவாயில்லை.

டெல்லிகணேஷ் — பாவம்.

சந்திரபோஸின் மியூஸிக்கில் மூன்று பாடல்கள் பரவாயில்லை.

க்ளைமாக்ஸ் — தீபாவளி படம் என்பதாலோ என்னவோ—வாணவேடிக்கைதான். இடைவேளைக்குப் பிறகு, சில பரபரப்பான சம்பவங்கள், ரஜினி ராக்ஷஸ பாக்கிங் பெட்டிகளின் மேல் சடு குடு ஆடுவதைக் குறிப்பிடலாம்.

ரஜினிக்கு ஒரு சுறுசுறு படம்தான். சந்தேகமில்லை.

ஆனால் —

இன்னமும் தம்முடைய பழைய மசாலா ஃபார்முலாவை விட்டுக் கொடுக்காமல் பிடிவாதமாக இருக்கும் எஸ்.பி. முத்துராமனைப் பார்த்துப் பாராட்டுவதா — பரிதாபப்படுவதா என்றே புரியவில்லை.

— ஜெயமன்மதன்




# த.தி.யின் இலவச யோசனை!

"அடுத்தடுத்து மக்களுக்கு என்னவெல்லாம் இலவசமாகக் கொடுக்கலாம் என்பதைத் திட்டமிட்டுச் செயல்படுத்த, இலவச மந்திரி ஒருவரை நியமித்து, இலவச இலாகா அவர் கீழ்ச் செயல்பட மாண்புமிகு முதலமைச்சர் வழி வகுக்க வேண்டும் என்று இலவச யோசனை வழங்குகிறேன்!"

— எஸ். கருணை யானந்தம், மதுரை.

"'ஒரு குடும்பம்; ஒரு வாரிசு' என்று குடும்பக் கட்டுப்பாடு பிரசாரம் செய்வதானது என் போன்ற பலருக்கு ஒரு தர்ம சங்கட நிலையைத் தோற்றுவித்திருப்பதால் குறைந்தபட்சமாக அதனை, 'ஒரு மனைவிக்கு ஒரு வாரிசு' என்று மாற்றி அமைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்!"

— க. தணிகைநாதன், திருவண்ணாமலை.

"இந்தியக் கிரிக்கெட் அணியைத் தேர்ந்தெடுக்கும்போது அதிலே தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு அறுபது சதம் இட ஒதுக்கீடு செய்தல் வேண்டும் என்பதே எமது அடுத்த போராட்டமாக வெடிக்கும் என்பதை மகிழ்ச்சியோடும் உறுதியோடும் தெரிவித்துக் கொள்கிறேன்."

— ஜி. சித்ரா, சென்னை — 11.

"வரதட்சணைக் கொடுமையின் உடன் விளைவாக 'ஸ்டவ் வெடித்து' இளம் பெண்கள் சாவதைத் தடுக்க, எங்கள் ஆட்சியில் ஒவ்வொரு மணமகளுக்கும் அஸ்பெஸ்டாஸ் புடைவை, ஜாக்கெட் இலவசமாக வழங்கும் திட்டம் அமுல் படுத்தப்படும்!"

— வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சை — 7.

"ரயில் வருகிறதென்றால் அதற்கு வழி விட சாலையில் செல்லும் வாகனங்கள் தான் லெவல் கிராசிங்கில் நிற்கின்றன. அதற்குப் பதில் ஏன் ரயில் நின்று சாலை வாகனங்களுக்கு வழிவிடக் கூடாது? இதுவொன்றே போதும், மத்திய அரசின் எதேச்சாதிகாரப் போக்கை உணர்த்த. அதனால்தான் மாநிலங்களுக்குச் சுயாட்சி வேண்டும் என்று போராடுகிறோம்!"

— ஆர். துளசிங்கம், திருவள்ளூர்.

ஒரு குடும்பத்துக்கு ஒரு வாரிசு
மனைவிக்கு









# குழாய் வழியே குடல் தெரிகிறது!

"இதன் வழியே பாருங்கள்...'' — ஒரு குழாயை நீட்டியபடி கூறுகிறார் டாக்டர். அதை வாங்கி, அதன் ஒரு முனையில் பொருத்தப்பட்டுள்ள லென்ஸ் வழியே பார்க்கிறோம். அதேபோன்ற ஒரு லென்ஸ் பொருத்தப்பட்ட, இயக்கும் உபகரணங்களுடன் கூடிய ஒரு முனை, டாக்டரின் கையில் உள்ளது. நமது கையில் இருப்பது கிளைக் குழாய்! குழாயின் மறுமுனை நோயாளியின் வாய்க்குள் இருக்கிறது.

''இதுதான் உணவுப்பாதை. இதன் வழியேதான் நாம் சாப்பிடும் உணவு வயிற்றைச் சென்று அடைகிறது'' என்று விளக்குகிறார் டாக்டர்.

லென்ஸ் வழியே பார்க்கும் நமக்குச் செக்கச் செவேல் என்று ஒரு நீண்ட பகுதியை வேகமாகக் கடப்பது போன்ற உணர்வு ஏற்படுகிறது.

''இப்போது வயிற்றுக்குள் நுழைகிறோம்'' என்கிறார் டாக்டர்.

வேகமாகக் கீழ்நோக்கிச் சரிந்து, ஒரு திருப்பம். பெங்களூர் தக்காளியின்

உட்பகுதி போன்ற இளஞ்சிவப்பில், வயிறு எழும்பி எழும்பித் தளர்ந்து கொண்டிருக்கிறது! சில விநாடிகளில் ஒரு மஞ்சள் திரவம் அப்பகுதியில் வந்து விழுகிறது.

''மஞ்சளாகத் தெரிவது பித்த நீர்...... (bile)'' என்கிறார் டாக்டர்.

படத்தின் அடுத்த காட்சியில், நுரைத்த படி உமிழ்நீர் போன்ற ஒரு திரவம் வயிற்றுக்குள் சுரப்பது தெரிகிறது.

''இதோ அமிலம் சுரக்கிறது. அதோடு ஜீரணத்துக்கு உதவும் வேறு சில திரவங்களும் சேர்ந்துள்ளன.''

''ஆமாம்! ஆமாம்! தெரிகிறது டாக்டர்!'' என்று ஆச்சரியம் பொங்கப் பதில் சொல்வதற்குள் — வட்டமாய் ஒரு துவாரம் தென்படுகிறது.

''இதுதான் வயிற்றிலிருந்து சிறுகுடலைச் சென்றடையும் வாயில்.''

நமக்கு ஆச்சரியத்தில் மூச்சே நின்று விடுமோ!

வட்டமான துவாரம் பார்வையிலிருந்து அகன்று, வளைந்து, வளைந்து செல்லும் ஜல்வு போன்ற சதைப் பாதை தோன்றுகிறது.

''சிறு குடலின் இறுதிப் பகுதி இதுதான். இதற்கு அப்புறம் பெருங்குடல் வரும். ஆனால் இந்தக் குழாயைக் கொண்டு அதைக் காண முடியாது. வேறு குழாயை ஆசன வாய் மூலம் மேற்புறமாகச் செலுத்தித்தான் பார்க்க வேண்டும். இப்போது நான் வெளியே வரப் போகிறேன்.''

வளைவுகளை மீண்டும் கடந்து துவாரம் வழியே வயிற்றை அடைகிறோம். சிவப்புச் சதையில் மேலும் அழுத்தமான சிவப்பில் புள்ளிகள் —

''நான் குழாயைச் செலுத்தி ஆராய்ந்த போது மிக லேசாக வயிற்றுப் பகுதியில் பட்ட காயம்'' — என்று விளக்குகிறார் டாக்டர்.

''வலிக்காதா டாக்டர்?'' நாம் பதறுகிறோம்.

''ஹூஹும்! வயிற்றின் உள்பகுதியில் உணர்ச்சி ஏற்படுத்தும் நரம்புகள் கிடையாது. அவை வயிற்றின் வெளிப்புறச் சுவரில்தான் இருக்கின்றன. அதனால் வலி தெரியாது.''

மீண்டும் உணவுக் குழாய் வழியே வந்து நோயாளியின் உள்ளேயிருந்து வெளிப்படுகிறோம்.

பக்கவாட்டில் படுத்திருக்கும் நோயாளியின் வாயிலிருந்து காஸ்ட்ரோஸ்கோப் என்ற கருவி வெளியே எடுக்கப்படுகிறது.

''உங்களுக்கு அல்ஸரோ கான்ஸரோ இல்லை. ஆரோக்கியமாக இருக்கிறீர்கள். கவலை வேண்டாம்'' என்று டாக்டர் அவருக்குத் தைரியம் கூறி அனுப்பி வைக்கிறார்.

* பயாப்ஸிக்குப் பயன்படுத்தப்படும் கம்பிகள்.



ஒரு நூதன அனுபவத்திலிருந்து இன்னும் மீண்டு வராத நாம், ஆச்சரியத்தில் திக்குமுக்காடிக் கொண்டிருக்கிறோம். 'மனித உடலுக்குள்தான் என்னென்ன விந்தைகள்! ஒவ்வொரு செயல்பாடும் எவ்வளவு கச்சிதமாக நேரம் தவறாமல் நடந்து கொண்டிருக்கிறது; சிருஷ்டியின் அற்புதம்தான் எவ்வளவு மகத்தானது!' என்ற எண்ணங்கள் தோன்றிய கையோடு, அந்த அற்புதங்களை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்து ஆராயக் கூடிய கருவிகளையும் நூதன முறைகளையும் கண்டுபிடித்துள்ள மனித ஆற்றலை எண்ணியும் வியப்பும் பெருமிதமும் ஏற்படுகின்றன.

இந்த உணர்ச்சிக் கலவையிலிருந்து ஒருவாறு மீண்டு வந்து, சென்னை அப்போலோ மருத்துவ மனையின் **gastro Intestinal endoscopy** பிரிவைச் சேர்ந்த டாக்டர் டி. பி. ரெட்டியிடம் விவரங்கள் கேட்டு அறிகிறோம்.

எண்டோஸ்கோபி என்று அழைக்கப்படும் பரிசோதனை, மற்றும் சிகிச்சை முறைகளுள் நம் நாட்டு மக்களிடையே அறியப்பட்டு, பிரபலமாக உள்ள ஒரே முறை லாபரோஸ்கோபிதான். லாபரோஸ்கோப் என்ற கருவியைக் கொண்டு வயிற்றுப் பகுதியில் ஒரு சிறு துளை போட்டு, கர்ப்பப்பை மற்றும் கரு உறுப்புக்களை ஆராய்கிறார்கள். கருத்தடை ஆபரேஷன் செய்கிறார்கள். லாபரோஸ்கோப்பைப் போன்ற கருவிகள்தான் காஸ்ட்ரோஸ்கோப், எண்டோஸ்கோப் போன்றவையும். ஆனால் வயிறு, குடல் பகுதிகளை ஆராயப் பயன்படும் இக்கருவிகளை உடலுக்குள் செலுத்த உடலின் எந்தப் பகுதியையும் வெட்டவோ காயப்படுத்தவோ வேண்டியதில்லை. அவை முறையே வாய் வழியாகவும் ஆசன வாய் வழியாகவும் உடலுக்குள் செலுத்தப்படுவதால், லாப

ரோஸ்கோப்பைப் பயன்படுத்தும்போது செய்வது போல், நோயாளியை மயக்கமுறச் செய்ய வேண்டிய அவசியமில்லை. காஸ்ட்ரோஸ்கோப்பை உட்செலுத்தும்போது வலி தெரியாமல் இருக்க நோயாளிக்கு ஓர் ஊசி மட்டும் போடுகிறார்கள். காலி வயிற்றோடு இருக்கும் நோயாளிக்குள் இக்குழாய்களைச் செலுத்தும் போது உள் உறுப்புக்களை டாக்டரால் துல்லியமாகப் பார்க்க முடிகிறது.

கோபப் புள்ளிகளாய்த் தெரியும் அல்சரையோ கான்ஸரின் ஆரம்பத்தையோ அல்லது கான்ஸரால் புரையோடிப் போன பகுதிகளையோ சில நிமிடங்களிலேயே கண்டுபிடிக்க உதவுகின்றன இப்பரிசோதனை முறைகள். தவிர, ஆராயப்படும் உறுப்புக்களிலிருந்து ஒரு சிறு தசைத் துண்டத்தை வெட்டி எடுத்துப் பரிசோதனைச் சாலைக்கு அனுப்பி, ஆராயச் செய்து, கான்ஸர் போன்ற நோய் உள்ளதா என்று உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

சில சமயங்களில் வயிறு அல்லது குடலின் இறுதிப் பகுதியில் **'polyps'** எனப்படும் சிறிய கட்டிகளைப் போன்ற ஒரு வளர்ச்சி ஏற்படுகிறது. இது கவனிக்கப்படாமல் இருப்பின் கான்ஸராக மாறக்கூடிய வாய்ப்பு உண்டு. காஸ்ட்ரோஸ்கோப் அல்லது கோலோனேஸ்கோப் மூலம் ஒரு வளைந்த கம்பியை அந்தக் கட்டியின் அருகே கொண்டு சென்று, அதைச் சுற்றிச் சுருக்குப் போடுவது போல் வளைத்து, அந்தப் பகுதியை மட்டும் **cauterize** செய்து பிரித்து எடுத்து விடுகிறார்கள். ஆக, வயிற்றைக் கிழிக்காமலே வியாதியை உறுதிப்படுத்துவதோடு இதுபோன்ற சில சிறிய ஆபரேஷன்களையும் செய்ய முடிகிறது.

சிலருக்குத் தொண்டைக் குழாயில் கான்ஸர் ஏற்பட்டு, சாப்பிட முடியாமல் போகும். இத்தகையவர்களுக்கு அறுவைச் சிகிச்சை மூலம் நிவாரணம் அளிப்பது சாத்தியமில்லை என்பதால், சமீப காலம் வரை, வயிற்றில் ஓர் ஓட்டை போட்டு அதன் வழியே உணவைச் செலுத்தி வந்தார்கள். ஆனால் இப்போது காஸ்ட்ரோஸ்கோப்பைக் கொண்டு அடர்த்தியாக வளர்ந்துள்ள கான்ஸர் பகுதியின் மையத்தில் லேஸர் கதிர்களைச் செலுத்தி வழி ஏற்படுத்துகிறார்கள். அதனால் உணவு செல்லும் பாதையிலுள்ள அடைப்பு சிறிது நீங்கி, நோயாளியால் வாய் மூலம் உணவு உட்கொள்ள முடிகிறது.

மேலும் திடீரென்று ரத்த வாந்தி ஏற்பட்டால் 'எமர்ஜென்ஸி' 'ஸ்கோபி' செய்து அதற்கான காரணத்தைக் கண்டுபிடிப்பதோடு, லேசர் கதிர்களைக் கொண்டு ரத்தக் கசிவைத் தற்காலிகமாக நிறுத்த முடியும்.

காஸ்ட்ரோஸ்கோப், கோலோனேஸ்கோப் தவிர வேறு சில ஸ்கோப்களும் உண்டு. அவை நுரையீரல் ஆராய்ச்சிக்கும் கல்லீரலிலிருந்து பித்தநீரைக் குடலுக்குள் கொண்டு வரும் குழாயை ஆராய்வதற்கும் பிரத்தியேகமாகச் செய்யப்பட்டவை.

## அடுத்த இதழ்...



# கூவம்:

## பழைய குற்றங்களும் புதிய திட்டங்களும்!

—கவர் ஸ்டோரி—

# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி-:.பாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| 3 மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| 6 மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| 9 மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| 12 மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

* இது-இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.
இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா— பராமரிப்பு வழிகாட்டி இலவசமாய் பெற்றிட இதை அனுப்புங்கள் இங்கே: க்ளிண்டியா லிமிடெட் (FPD/51) டாக்டர் அன்னி பெஸண்ட் ரோட், ஓர்லி, பம்பாய்-400 025..




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த :.பாரெக்ஸ் அளியுங்கள்.

**:.பாரெக்ஸ்®**

**சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி**

26/203



• ஒவ்வோர் உபயோகத்துக்குப் பிறகும் ஸ்டெரிலைஸ் செய்ய வேண்டும்.

நுணுக்கங்களும் விலையும் மிகுந்த அவை, இந்தியாவில் அரிதாகவே உள்ளன.

குழாய்களை உடலுக்குள் செலுத்துவதால் உடலுறுப்புக்களைச் சேதப்படுத்தும் வாய்ப்பு மிகக் குறைவுதான் என்றார் டாக்டர் ரெட்டி. ஒவ்வோர் உபயோகத்துக்குப் பிறகும் உபகரணங்கள் பிரத்தியேக திரவத்தில் ஸ்டெரிலைஸ் செய்யப்படுகின்றன. எனவே ஒருவரிடமிருந்து நோய்க் கிருமிகள் மற்றொருவருக்குத் தொற்ற வாய்ப்பில்லை.

எக்ஸ்ரேக்கள் மூலமும், பேரியம் மீல் எக்ஸ்ரேக்கள் மூலமும் வயிறு, குடல் போன்ற உறுப்புக்களைப் பரிசோதித்த காலம் கிட்டத்தட்ட முடிந்துவிட்டது. பேரியம் மீல் எக்ஸ்ரேக்களை எடுக்கும்போது மிகுந்த அனுபவம் உள்ளவர்கள் கூடத் தவறிழைக்கும் சாத்தியக்கூறுகள் உண்டு. அதனால், பெறப்படும் முடிவுகளை முழுவதும் நம்ப முடியாது. ஆனால் எண்டோஸ்கோபி முறையில், மருத்துவர் கண்ணுக்கு மெய்யாகச் சந்தேகத்துக்கிடமின்றி வியாதியைத் தாமே அடையாளம் கண்டு கொள்கிறார். எனவே மருத்துவர்களுக்கு எண்டோஸ்கோப் ஒரு வரப்பிரசாதம். நோயாளிக்கும் பரிசோதனையைச் சில நிமிடங்களில் முடித்துக் கொள்ள முடிகிறது. கால விரயம் அதிகம் ஆவதில்லை.

மேலும், எண்டோஸ்கோப் வழியே உடலுக்குள் காண்பதைப் புகைப்படங்கள் எடுத்து நிரந்தரப்படுத்தி மருத்துவ மாணவர்களுக்குப் பாடம் நடத்தவும் உபயோகிக்கலாம்.

இம்முறையில் பரிசோதனை செய்வது டாக்டருக்கு மிக எளிது என்று பார்ப்போருக்குத் தோன்றும். ஆனால் உண்மையில் அது அவ்வளவு சுலபம் அல்ல. தேர்ந்த அறிவும், லாகவமும் இதற்குத் தேவை. ஓட்டுனர் இல்லாத ஒரு வாகனத்தை உடலுக்குள் வெளியே இருந்தவாறே செலுத்துவதைப் போன்றது இது. இந்த ரிமோட் கன்ட்ரோல் முறையில் விபத்து நடக்காமல் இருக்க வேண்டும்; அதே சமயத்தில் கவனம் உடலுறுப்புக்களை ஆராய்வதிலும் பதிய வேண்டும்.

எண்டோஸ்கோப்கள் எப்படி இயங்குகின்றன என்று விளக்கினார் அப்போலோவில் பணிபுரியும் இத்துறை வல்லுனர் டாக்டர் கிருஷ்ணன்:

'எண்டோ' (endo) என்றால் உள்ளே; 'ஸ்கோப்' (scope) என்றால் 'பார்த்தல்' என்று பொருள். உடலுக்குள்ளே பார்க்க உதவும் இக்கருவி இதனால் எண்டோஸ்கோப் என்று பெயர் பெற்றது.

ஆரம்ப காலத்தில் இக்கருவி புல்லாங்குழல் வடிவில் எஃகால் செய்யப்பட்டு வந்தது. குழாயின் ஒரு முனையில் சிறிய மின்சார பல்ப் பொருத்தியிருக்கும். அதன் வெளிச்சத்தைக் கொண்டு உடலுக்குள் உள்ள உறுப்புக்கள் ஆராயப்பட்டன. ஆனால் இக்குழாய்க்கு வளைந்து கொடுக்கும் தன்மை இராததால் அதை வளைவுகள் நிறைந்த மனிதக் குடலுக்குள் முழுவதும் செலுத்த முடியவில்லை. ஆசன வாய் மூலம் பெருங்குடலின் கடைசி இருபத்தைந்து சென்டிமீட்டர்களையும் வாய் வழியே இரைப்பையின் மேல் பகுதி வரையிலுமே ஆராய முடிந்தது. மேலும், அதன் முனையில் இருந்த பல்பு வெளிப்படுத்திய உஷ்ணம், உடலின் மென்மையான உள்ளுறுப்புக்களைப் பாதிக்கும் வாய்ப்பும் இருந்தது.

தற்போது உபயோகிக்கப்படும் குழாய்களில் இவ்விரு குறைகளும் நீக்கப்பட்டுள்ளன. குழாய் நன்றாக வளைந்து கொடுக்கும் தன்மையுடையதாய் உள்ளதோடு, வெளிச்சம் வெளியே இருந்து, குழாய்க்குள் உள்ள கண்ணாடிப் பூச்சுடைய மெல்லிய இழைகள் மூலம் உட்செலுத்தப்படுகிறது.

இந்த நூதனக் கருவி **Total internal reflection** எனப்படும் பௌதிக விதியின் அடிப்



* இரண்டரை லட்ச ரூபாய் மதிப்புள்ள கருவி.

படையில் செயல்படுகிறது. ஒரு குச்சியைத் தண்ணீருக்குள் செலுத்தினால் அது சற்றே வளைந்திருப்பது போல் கண்ணுக்குத் தோன்றும். திரவத்தின் கனத்துக்கு ஏற்ப மூழ்கியுள்ள குச்சியின் வளைவு அதிகரிக்கும். இவ்வளைவு நூறு சதமாகும் போது குச்சி திரவத்துக்கு மேலே நம்மை நோக்கித் திரும்பியுள்ளதைப் போல் தோன்றும். இதையே Total internal reflection என்பார்கள். இந்த விதியின் அடிப்படையில்தான், உடலுக்குள் இருக்கும் உறுப்புக்களை நாம் காணும் வகையில் எண்டோஸ்கோப்கள் தயாரிக்கப்படுகின்றன.

இக்கருவிகள் ஜப்பான் மற்றும் ஜெர்மனியிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. ஒலிம்பஸ், பென்டாக்ஸ், ஃப்யூஜி போன்ற ஜப்பானிய காமிரா தயாரிப்பு நிறுவனங்கள் தற்போது இவற்றைத் தயாரித்து வருகின்றன. விலை – குறைந்தபட்சம் இரண்டரை லட்சம் ரூபாய்! இதில் சுங்க வரி மட்டும் நூற்றிப்பத்து சதவிகிதம்! கண்ணாடி இழைக் கற்றைகள் பழுதாகி விட்டால் ஒரு லட்சம் ரூபாய் செலவழித்து அவற்றை மாற்ற வேண்டும். எந்த ரிப்பேரானாலும் வெளிநாட்டுக்குத்தான் கொண்டு போக வேண்டும்.

இந்தச் செலவுகளுக்குப் பயந்து ஒரு பரிசோதனைக்கு ஐந்நூறு ரூபாய் வாங்குகிறார்கள் அப்போலோ மருத்துவமனையில்! ஆனால் எவ்வளவு பேரால் ஐந்நூறு ரூபாய் கொடுத்து அப்போலோ மருத்துவ மனையில் எண்டோஸ்கோபி செய்து கொள்ள முடியும்? உயிர் காக்கும் இக் கருவியின் சுங்க வரியைக் குறைத்தால் சிறிய மருத்துவ மனைகள் கூட இதனை வாங்கி நடுத்தர வர்க்கத்தினரும் ஏழைகளும் பயனடைய வழி வகுக்கலாம். ஆனால் வரிகளும் விலைவாசியைப் போல ஏறு முகமாக உள்ளனவேயொழிய இறங்கப் போவதாகவே தெரியவில்லையே!

— சீதா ரவி

மேலட்டை வண்ணப்படம்
புகைப்படங்கள்: யோகா

அட்டையில் சிறிய வண்ணப்படங்கள்
உதவி: டாக்டர் கிருஷ்ணன்

# சிரிக்கச் செய்பவருக்குப் பரிசு ரூ. 200/-!



நகைச்சுவைக் கதை, கட்டுரை அல்லது நாடகம் எழுதி அனுப்புங்கள். கல்கியில் 2 – 3 பக்கங்களுக்கு மேல் போகாத அளவில் அமைய வேண்டும். பிரசுரமானால் பரிசு ரூ. 200! ஏற்கப்படாதவற்றைத் திரும்பப் பெறத் தபால் தலைகள் இணைக்கவும்.

— ஆசிரியர், கல்கி.



# உங்கள் திறமையைப் பிரதிபலிக்கச் செய்வது உங்கள் சமையல் பாத்திரங்கள்.



நான் உபயோகிப்பது...

உயர்ந்த தரமான
பாத்திரங்களுக்கான
இந்திய அரசின்
தேசிய விருதினைப் பெற்றது.

# காளி

## காப்பர்-பாட்டம்

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்

38 வருட சிறந்த அனுபவம் பளிச்சிடுவது

kali kali ISI

ISI முத்திரை பெற்றது.

**காளி: கவர்ச்சியானது மட்டுமல்ல, சிக்கனமாயும் சீக்கிரமாயும் சமைக்கவல்லது.**

விற்பனை ஏஜெண்ட்: ஸ்ரீவித்யா ஏஜன்சீஸ், கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.

மண்டல ஏஜெண்டுகள்: சம்மு & கோ., த.பெ.எண். 3622, மகாத்மா காந்தி ரோடு, எர்ணாகுளம், கொச்சின் 682 035. போன்: 361139. ● விக்டரி மெட்டல்ஸ், 101, கேத்வாடி மெயின் ரோடு, பம்பாய் 400 004. போன்: 354507/380075.
● தினேஷ் எண்டர்பிரைசஸ், 41/1942, நைவாலா, கரோல்பாக், புதுடில்லி 110 005. போன்: 5716923.
● ஈஸ்ட் இந்தியா கம்பெனி, 3, அம்ரிதா பானர்ஜி ரோடு, (காளிகாட் P.O. எதிரில்), கல்கத்தா 700 026. போன்: 47-1840.

ADWAVE/KBS/3428 TAM A



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ.கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் **85** மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.

---

# பருப்பிலிருந்து பால்



**கொஞ்ச நாட்களுக்கு முன் ரேஷனில் சோயா எண்ணெய் என்று ஒரு புதிய வகை எண்ணெயைப் பாமாயிலுக்குப் பதிலாய்க் கொடுத்தார்கள். ஆனால் அதை அடுப்பில் வைத்தால், பொசுங்கின நாற்றம் வருகிறது என்று சொன்னார்கள் மக்கள். அதனால் சோயா எண்ணெய் வினியோகம் நிறுத்தப்பட்டது. ஆனால் இப்போது சோயா பால் இந்தியாவின் பெரிய நகரங்களில் பிரபலமாகிக் கொண்டிருக்கிறது. அதைப் பற்றிச் சில தகவல்கள்......**

கேள்வி: 'சோயா' என்பது என்ன?

பதில்: பட்டாணி, கொத்துக்கடலை போல் 'சோயா'வும் ஒரு பருப்பு. நாம் சாப்பிடும் பீன்ஸ், அவரைக்காய் போல நீளமாய் இருக்கும். சோயாவைச் செடியிலிருந்து பறித்து, காய வைத்து உரித்து, பருப்பை எடுப்பார்கள். உலர்ந்த பருப்பு 'பிரவுன்' கலரில் குண்டு குண்டாய் முழித்துக் கொண்டு இருக்கும். சோயா அதிகம் பயிராவது மத்தியப் பிரதேசத்தில்தான். சீனாவிலும், ஜப்பானிலும் கடந்த மூவாயிரம் வருடங்களாகச் சோயா பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால் இதர உலக நாடுகள் சோயாவின் மகத்துவத்தைப் புரிந்து கொண்டது கடந்த சில நூற்றாண்டுகளில்தான்.

கேள்வி: அதில் அப்படி என்ன மகத்துவம் இருக்கிறது?

பதில்: நம் உடம்புக்கு அவசியமான புரதச்சத்து சோயாவில் நிறைய இருக்கிறது. தவிர, வைட்டமின்கள் 'ஏ'வும், ஈ யும் உள்ளன. ஆரோக்கியமான தசைகள், எலும்புகள், தோல் மற்றும் ரத்தவிருத்திக்குப் புரதம் அவசியமானது. முட்டை, இறைச்சி, மற்ற பருப்பு வகைகளைவிட, சோயாவில் புரதம் அதிகமாய் உள்ளதால் சைவ உணவு மட்டுமே சாப்பிடுகிறவர்களுக்கு இது ஒரு வரப்பிரசாதம். மேலும், அசைவ உணவுகளில் உள்ள கொலஸ்ட்ரால் இதில் கிடையாது.

கேள்வி: சோயாவிலிருந்து பாலை எப்படி எடுக்கிறார்கள்?

பதில்: இதுவும் மத்தியப் பிரதேசத்தில்தான் நடக்கிறது. நன்கு முற்றின சோயா பருப்புகளை, மெஷினில் கொதித்து அழுத்தினால், பால் வரும். இதுதான் சோயா பால். வெண்மையாய் இருக்கும். துவர்க்கிற சுவை. அப்படியே குடித்தால் குமட்டும்.

கேள்வி: ஐய்யோ! அப்போ அந்தப் பாலை எடுப்பதில் என்ன பயன்?

பதில்: அவசரப்படாதீர்கள்! வெண்மை நிற, துவர்ப்புச் சுவையுடைய சோயா பாலைப் பதப்படுத்தி, எஸ்ஸென்ஸ் சேர்த்து, சுவையேற்றுகிறார்கள். இப்போது இந்தப் பால் விதவிதமான சுவைகளில் கடைகளிலெல்லாம் கிடைக்கிறது. சின்னச் சின்ன அட்டைப் பெட்டிகளில் அடைத்து விற்கிறார்கள்.

கேள்வி: அட்டைப் பெட்டியா? ஓ, ஆவின் பால் வருகிறதே அதைப் போலவா...?

பதில்: ஆமாம். அந்த அட்டைப் பெட்டிக்கு 'டெட்ரா பாக்' என்று பெயர். மிக மிக மெல்லிய அலுமினியத் தகடு, மெல்லிய காகிதத் தாள் இரண்டையும் மாற்றி மாற்றி வைத்து, ஏழு அடுக்குகள் கொண்ட தடித்த 'ஷீட்' தயாரிக்கிறார்கள். அந்த கனமான ஷீட்டைக் கொண்டுதான் பெட்டிகளைச் செய்கிறார்கள். மூன்றுபுறம் ஒட்டப்பட்ட பெட்டியினுள் பாலை நிரப்பி, நான்காவது பக்கத்தைக் காற்றுப் புகாமல் அழுந்த மூடி விடுகிறார்கள். பெட்டியின் மேற்புற மூலையில் துளை போட வசதியாய் ஒரு சிறிய வட்டம் இருக்கும். சிறிது தடிமனான ஸ்ட்ராவை இந்த வட்டம் வழியே பாக்கெட்டினுள் நுழைத்து, உறிஞ்ச வேண்டியதுதான். இதுபோன்ற பாக்கிங்கை முதன் முதலில் அறிமுகப்படுத்திய டெட்ரா டாரிக் என்கிற ஸ்வீடிஷ் கம்பெனியின் பெயரால்தான் இவ்வகை பாக்கிங் 'டெட்ரா பாக்' என்று அழைக்கப்படுகிறது.

கேள்வி: இந்த முறையில் 'பாக்' செய்வதால் என்ன லாபம்?

பதில்: உள்ளேயிருக்கும் பண்டம் ஆறு மாதங்கள் வரை கெடாது. அதோடு, பாக்கெட்டும் கண்ணாடி பாட்டிலைப் போல் கனமாக இராது, இடத்தை அடைத்துக் கொள்ளாது, உடையாது. அதனால் கஷ்ட நஷ்டங்கள் தவிர்க்கப்படுகின்றனவே!

— தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

புகைப்படம்: **சோமு**



அட்டைப் பெட்டியிலிருந்து உறிஞ்சலாம்.


சமத்தோல்லியோ! இந்த ஸ்டூல்லே உக்காந்து ஹல்வா, ஜலேபி, சாக்லேட், பப்புட்டு எல்லாம் சாப்பிடு!
அமைதிப் படை
விடுதலைப் புலிகள்
சரணடையும் புலிகளுக்குச் சலுகைகள்
இந்திய-இலங்கை ஒப்பந்தம்


மகாராஷ்ட்ரா
முதல்வர் பதவி
சும்மா உலுக்கறோம்!.. அவ்வளவு தான்!.. நீங்க ஜாடை காட்டிடு தான் கீழே தள்ளுவோம்!
வசந்த் தாதா பாட்டீல்
எஸ்.பி. சவான்
ஷரத் பவார்


வாரே வாஹ்! நிம்பள் கிட்டே நம்பள் கத்துக்கறன்!




# கல்கி

1987 டிசம்பர் 6
மலர் 46 இதழ் 19
பிரபவ கார்த்திகை 20




## தமிழினத் துரோகிகள் யார்?

ஈழத்தில் அமைதிப் படையின் நடவடிக்கைகளை ஆதரித்து இங்கு எழுதி வரும் பத்திரிகைகளும் பேசிவரும் கட்சிகளும் தேசபக்தி உள்ளவையாகத் தங்களைக் காட்டிக் கொண்டு தமிழினத்துக்குத் துரோகம் செய்து வருகின்றன என்பதாகக் குற்றச்சாட்டு. தேச பக்தனாக இருக்கும் ஒருவன் தமிழினத் துரோகியாக எவ்வாறு விளங்க முடியும்? அடிப்படையிலேயே முரண்பாடு!

ஈழத் தமிழர்களுக்கு உதவவே சென்றுள்ளது அமைதிப்படை. குறிப்பாக வடக்கு, கிழக்கு பகுதிகளில் அமைதி திரும்புவதையும், தமிழர்கள் சுயாட்சி பெறுவதையும், ஜனநாயகம் மலர்வதையும் உறுதிப்படுத்தவே அனுப்பி வைக்கப்பட்டது அமைதிப்படை. அதனுடன் ஒத்துழைக்காமல் முட்டுக்கட்டை போட்டனர் விடுதலைப்புலிகள். ஆயுதங்களை ஒப்படைக்காமல் வன்முறைகளில் விடுதலைப்புலிகள் மீண்டும் இறங்கவேதான் அவர்களிடமிருந்து ஆயுதங்களைப் பறிக்க வேண்டிய நிர்ப்பந்தம் அமைதிப்படைக்கு ஏற்பட்டது. அமைதிப்படையும் சரி, அதனை ஆதரித்துப் பேசியும் எழுதியும் வருவோரும் சரி, விடுதலைப்புலிகளின் விரோதிகள் அல்ல. நண்பர்களே. நண்பர்களானபடியால் தான், 'வன்முறையை விட்டொழியுங்கள், ஜனநாயக மரபுகளுக்கு உட்பட்டுச் செயலாற்றுங்கள்' என்று திரும்பத் திரும்ப நட்புரிமையுடன் கேட்டுக் கொள்கிறோம். அந்த நட்பின் ஓர் அடையாளமாகத்தான் ஆயுதப் பரிகரண நடவடிக்கையை நாற்பத்தெட்டு மணி நேரத்துக்கு அமைதிப்படை நிறுத்தி வைத்தது. ஆயினும் பயனில்லை. விடுதலைப் புலிகள் ஆயுதங்களை ஒப்படைக்கவோ ஒப்பந்தத்தை மதிக்கவோ தயாராயில்லை என்பதோடு அபத்தமான நிபந்தனைகளை வேறு விதித்தனர். இதைவிட, 'நட்பு முறையில் அளிக்கப்படும் அறிவுரைகளை நாங்கள் ஏற்கத் தயாராக இல்லை; எங்களுடைய வன்முறைப் போக்கை மாற்றிக் கொள்ளவோ, ஜனநாயக மரபுகளுக்கு உட்பட்டு நடக்கவோ எங்களுக்கு விருப்பமில்லை' என்று அவர்கள் வெளிப்படையாகவே கூறியிருக்கலாம்.

பார்க்கப் போனால் விடுதலைப் புலிகளின் மனம் மாறும் என்று எதிர்பார்ப்பதே கூடத் தவறுதான். ஏனெனில் விடுதலைப்புலிகளின் அடிப்படைக் கொள்கைகளே அத்தகையன. அவர்கள் வன்முறையில் நம்பிக்கை கொண்டவர்கள். அவர்கள் ஆட்சிக்கு வரக் கூடுமானால் அந்த ஆட்சி யதேச்சாதிகார ஆட்சியாகத்தான் இருக்க முடியும். இதனைப் பிரபாகரனும் அவருடைய அரசியல் ஆலோசகர்களும் பல முறை தங்கள் பேச்சுக்களிடையே கூறித் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள். இதனைப் புரிந்து கொள்ளாமல், 'ஐயோ, மாற மாட்டேனென்கிறார்களே' என்று வருந்திப் பதறுவது நம் குற்றம்தான்.

பிரபாகரன் ஒருவேளை தனித் தமிழ் ஈழம் பெற்று ஆட்சி அமைப்பாரானால், அங்கே வேறு யாரும் மாற்று அரசியல் கட்சி அமைக்கவோ, பிரசாரம் செய்யவோ முடியாது. தேர்தல் இராது. அப்படியே இருந்தாலும் பிரபாகரன் கட்சி மட்டுமே தேர்தலில் நிற்க முடியும். பிரபாகரன் கட்சி மட்டுமே மந்திரி சபை அமைக்கும். எதிர்க்கட்சி என்று எதும் இராது. ஆட்சியைக் குறை கூற இயலாது. பத்திரிகைகள் அரசு வசம் இருக்கும். பத்திரிகைச் சுதந்திரம் இராது. ஆட்சியை விமர்சித்து, எழுதவோ, கார்ட்டூன் போடவோ முடியாது. மக்களை அரசுக்கு எதிராக யாரும் திருப்பிவிட முடியாது. அப்படிச் செய்ய முயன்றால் அவர் தலை போய்விடும்!

பிரபாகரன் இத்தகைய ஆட்சியைத்தான் அளிப்பார். காரணம், அவருடைய நம்பிக்கைகளும் கொள்கைகளும் அத்தகையவை. அவற்றை மாற்றிக் கொள்ள அவர் தயாராக இல்லை. யாழ் பகுதியில் விடுதலைப்புலிகள் சில காலம் ஆட்சி நடத்திய போது துப்பாக்கி முனையில் வரி வசூல் நடந்ததை யாரும் மறக்கவோ மறுக்கவோ முடியாது.

ஆக, ஈழத் தமிழர்களுக்கு எது நன்மை? யார் நன்மை எண்ணுகிறார்கள்? மனத்தில் கை வைத்துத் தமிழகத் தமிழன் பதில் கூறட்டும்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# 1000 கட்டினால் 3000!

## சறுக்கிவிட்டால் பரிதாபம்!

உங்கள் வீட்டுக்கு உபயோகமான பொருட்கள் ஏதேனும் வாங்க வேண்டுமா? குத்து விளக்கு முதல் மாருதி கார் வரை சகலமும் வாங்கலாம் — மூன்றில் ஒரு பங்கு விலையைச் செலுத்தி! ஆனால் ஒரு நிபந்தனை: நீங்கள் செலுத்தும் அதே தொகையைச் செலுத்த வேறு மூன்று நபர்களை நீங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும். அவர்கள் ஒவ்வொருவரும் ஐம்பது நாட்களுக்குள் நீங்கள் செலுத்திய தொகையைச் செலுத்திவிட வேண்டும். அப்படி செலுத்தினால் நீங்கள் எந்தப் பொருளுக்காகப் பணம் செலுத்தினீர்களோ அதைப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது நீங்கள் செலுத்திய தொகையைப் போன்று மும்மடங்கு பணமாகவே திரும்பப் பெறலாம். இப்படி விளம்பரப் படுத்தி செவன் ஸ்டார் எண்டர்பிரைசஸ் நிறுவனம் திருப்பூர் மேட்டுப்பாளையம் மற்றும் கருவம்பாளையத்தில் வியாபாரம் செய்து வருகிறது.

கேட்பதற்குச் சுலபமாக இருக்கிறது — மூன்றில் ஒரு பங்கு விலைக்கு ஒரு பொருளை வாங்கி விடலாம் என்ற 'த்ரில்' கிடைக்கிறது. ஆனால் உண்மையில் நடப்பது என்ன? உங்கள் பணம் நாள் கணக்கில் வியாபாரியிடம் இருப்பதோடு, முப்பது ரூபாய்ப் பொருளை, அவர் நாற்பது ரூபாய் பெற்றுக் கொண்ட பிறகே உங்களுக்குத் தருகிறார். அது மட்டும் அல்ல. இந்தத் திட்டத்தின் கீழ், பிறரால் அறிமுகப்படுத்தப்படும் ஒவ்வொரு நபரும் முறையே வேறு மூன்று நபர்களை அறிமுகப்படுத்திப் பணம் செலுத்தச் செய்ய வேண்டும். அப்போதுதான் அவரால் தாம் விரும்பும் பொருளை வாங்க முடியும். சங்கிலித் தொடர் அறுந்து போனால் அவருக்கு ஏற்கெனவே கட்டிய பணம் நஷ்டம்தான். ஆனால் பொருளை விற்பவருக்கோ எந்தவித நஷ்டத்துக்கும் இடமே கிடையாது! கையில் மேன் மேலும் பணம் புரண்டு கொண்டேயிருக்கும்.

சங்கிலித் தொடர் விட்டுப் போகாமல் பணம் செலுத்துவதற்கு ஆள் பிடிக்கும் வேலையை தமது ஏஜெண்டுகள் மூலம் நிறுவனமே செய்து தருவதும் உண்டு. இதற்குப் பத்து சதவிகிதம் கமிஷனும் பெற்றுக் கொள்கிறது.

சங்கிலித் தொடர் எத்தனை நாட்களுக்குத் தான் அறுபடாமல் இருக்கும்? முப்பது ரூபாய் பெறுமானமுள்ள பொருளை நாற்பது ரூபாய்க்கு விற்பது எந்த விதத்தில் தர்ம நியாயமானது? என்ற கேள்விகள் நம் மனத்தில் எழுகின்றன. பொருளாதார வல்லுனர்களைக் கேட்டபோது இத்தகைய வியாபாரம் தார்மீக ரீதியில் தவறு என்பதோடு இது நிச்சயமாக வெகு நாட்களுக்கு நீடிக்க முடியாது என்றும் எச்சரித்தனர்.

ஆனால் திருப்பூர் நகரப் பொதுமக்கள் இதைப் பற்றி யோசித்ததாகத் தெரியவில்லை. செவன் ஸ்டார் எண்டர்பிரைசஸின் இரு கடைகளிலும் ஏகப்பட்ட கூட்டம். தினந்தோறும் காலை பத்து மணி முதல் பிற்பகல் ஒரு மணி வரையிலும், மதியம் மூன்று மணி முதல் இரவு ஒன்பது மணி வரையிலும் மக்கள் நீண்ட க்யூ வரிசைகளில் நின்று பணம் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். பணம் செலுத்துவோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருக்கிறது.

கடந்த 16.11.87 அன்று செவன் ஸ்டார் எண்டர்பிரைசஸுக்குச் சென்று விசாரித்த போது, அந் நிறுவனத்தில் சுமார் ஐம்பது பேர் வேலை செய்வதாகத் தெரிந்தது. முக்கியமான உயர் அதிகாரிகளைச் சந்திக்க வேண்டும் என்று கேட்டபோது யாரையும் பார்க்க முடியாது என்று கூறி விட்டார் ஒரு சிப்பந்தி. எப்பொழுது அவர்களைப் பார்க்கலாம் என்று விடாமல் விசாரித்த போது 'அதெல்லாம் உறுதியாகச் சொல்ல முடியாது; நோட்டீஸ் விநியோகம் செய்வதுதான் என் வேலை' என்று கூறி விட்டுத் தம் கடமையில் ஆழ்ந்து விட்டார்.

க்யூவில் நின்றிருந்த பொது மக்களை அணுகினோம். 'எங்களுக்கு முன்னால் பணம் கட்டினவங்க பொருள் வாங்கிட்டுப் போயிருக்காங்க. அதனாலே நாங்களும் கட்டறோம்' என்றார்கள். நிறுவனத்தைப் பற்றிய வேறு எந்த விவரமும் அவர்களுக்குத் தெரியவில்லை!

அவிநாசியில் இதே பாணியில் 'மங்களம் பேன்ஸி சர்க்யூட்' என்று நடத்தப்பட்டு வருகிறது. அங்கு சென்று விசாரித்த போது, ''பணம் கட்டுவதாக இருந்தால் கட்டுங்கள், இல்லாவிட்டால் இடத்தைக் காலி செய்யுங்கள்'' என்று விரட்டியடித்து விட்டார்கள்.

நடுத்தர வர்க்கத்தினர் பலர் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணத்தையும் சில சமயம் வீட்டுப் பொருள்களை விற்றுப் பெற்ற பணத்தையும் இத்தகைய நிறுவனங்களில் முதலீடு செய்து வருகிறார்கள். இத்தகைய எளியவர்கள் காப்பாற்றப்பட வேண்டுமாயின் சர்க்யூட் வியாபாரங்களைத் தடை செய்யச் சட்டம் கொண்டு வந்தாக வேண்டும்.

— சிறுமுகை தியாகு



# அவளுக்கும் கவனிப்புத் தேவை

காலை ஆகாரம் தயாரித்தல், என் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்ப தயார் செய்தல், பகலுணவு தயாரித்தல், கடைக்குப் போவது, வீட்டையும் எனது குடும்பத்தையும் பார்த்துக்கொள்வது.

எனக்கு நாள் முழுதும் ஓயாத வேலை. அதனால்தான் எனக்கு ஹார்லிக்ஸ் தேவை. ஹார்லிக்ஸின் ஊட்டச்சத்து எனக்கு நாள் முழுதும் சக்தியையும் பலத்தையும் அளிக்கிறது. என் குடும்பத்துடன் மதிப்புமிக்க மாலை நேரங்களை அனுபவிக்கப் போதிய புத்துணர்வுடன் நான் இருக்கிறேன்...



ஒரு குடும்பத் தலைவியின் வலுவூட்டும் பானம்.

மால்டெட் பார்லி, முழு ஆடைப்பால் மற்றும் பொன்னிற கோதுமை கொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச் சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென நிபுணர்களைப்பெற்றது. ஏனவே கடந்த 50 வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின் மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சர்யமில்லை.




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HMM-9241 TAM R

# வேரில்லாத மரங்கள் 8

"நம்ம வசதிக்கேத்த ஒரு வீடு வேணும்னு சொன்னு, அதுக்கு எவ்வளவு வாடகை கொடுக்க வேண்டி வரும் வசந்தா...?"

"அது நம்ம தேவையைப் பொறுத்திருக்கு மாது... ரெண்டு பேர் இருக்க ஒரு குட்டி வீடு போதாது?"

"ம்ம்... போதும். ஒரு சமையலறை, ஒரு பெட்ரூம், ஒரு ஹால், சாப்பாட்டு அறை, பாத்ரூம், டாய்லெட்... எதையாவது விட்டுட்டேனு வசந்தா?"

"எதையும் விடலே. அதான் ப்ராப்ளம்! நீங்க சொல்ற அத்தனை வசதிகளும் வேணும்னு, வாடகை எக்கச்சக்கமா ஆகும்... நம்மால முடியுமா?"

"முடியாம என்ன? எங்க பாங்க்குல வாடகை அலவன்ஸ் நிறைய உண்டு. அதை வேஸ்ட் பண்ணாம உபயோகப்படுத்திக்கலாமே... சொல்லப் போனு, கைக்காசுல காலணக் கூடச் செலவழிக்க வேண்டி வராது... அட்வான்ஸ்தான் எவ்வளவுன்னு தெரியல...

"மாது, இப்படி செஞ்சா என்ன? நம்மகிட்ட மொத்தம் எவ்வளவு பணம் இருக்குன்னு ஒரு கணக்குப் பார்ப்போமா? அப்புறமா அதை வெச்சு மத்த விஷயங்களை ஏற்பாடு செய்யலாம்..."

"எங்கிட்டே ரொம்ப ஒண்ணும் இல்லே வசந்தா... பாங்க்ல ஒரு ஆறாயிரத்துச் சில்லறை ரூபா இருக்கு, அவ்வளவுதான்..."

"என்கிட்டே அது கூட இல்லே மாது... நா இப்பத்தான் வேலைக்கே போக ஆரம்பிச்சிருக்கேன்... இத்தனை நாளு அண்ணன் கிட்டேயிருந்து அஞ்சு பத்துதான் கிடைச்சுதே தவிர, பெரிசா எதுவும் இல்லே... ஆனு, எங்கம்மா முன்னே வெச்சிருந்த நகை எல்லாம் எனக்குத்தான்னு அண்ணன் சொல்லியிருக்காரு... அது அத்தனையும் இல்லாட்டிக்கூட, கொஞ்சத்தையாவது எடுத்துக்கிட்டு வர முடியும். ஒரு சமயம் சந்தர்ப்பம்னு வந்தா, அதை வித்து உபயோகப்படுத்திக்கலாம்... சரி, இந்த ஆறாயிரத்துல ஆயிரத்தை அவசரத் தேவைகளுக்குன்னு ஒதுக்கிடுவோம். மீதிப் பணத்துல, வீட்டுக்கு அட்வான்ஸ் கொடுக்கணும், சமையலுக்குத் தேவையான பாத்திரங்களை வாங்கணும்... ம்ம்... ஆயிரம் ரூபாய்க்கு வாங்கினு பத்தாது?"

"நாலு டம்ளர் டபராவும், ரெண்டு சாப்பாட்டுத் தட்டும், மத்த சாமான்களுக்கும் ஆயிரம் வேணுமா வசந்தா?"

"ப்ரஷர் குக்கர் இருந்தா காலை வேளைல சமையலை முடிச்சிட்டு ஆபீஸுக்குப் புறப்பட வசதியா இருக்கும்... காஸ் அடுப்புக்கு ஏற்பாடு பண்ண முடியுமா மாது? அதுக்கு வேற எக்கச்சக்கமா ஆகுமே... இதைத் தவிர, பாத்ரூம் உபயோகத்துக்கு பிளாஸ்டிக் சாமான்கள் வாங்கணும்!"

"சரி, குளியல், சமையல், சாப்பாடு ஆயிடுச்சு! அப்புறம்?"

"சாப்பாடு இன்னும் முழுக்க முடியலியே மாது! எங்க உக்காந்துக்கிட்டு சாப்பிடறது? ஒரு சின்ன டேபிள், ரெண்டு நாற்காலியாவது வேணுமா?"

"வேணும்தான்... ஆனு வசந்தா, இதெல்லாம் வாங்க இப்போ காசிருக்குமா? ஹால்ல போட நாலு கூடை நாற்காலி, அவசியமா வேணும்! வீடுன்னு இருந்தா, நாலு பேர் வரப் போகத்தானே செய்வாங்க... அவங்களை எங்கே உக்காரச் சொல்றது?"

"கரெக்டுதான்! டைனிங் டேபிள் வேணு நம்ம லிஸ்டுலேர்ந்து அடிச்சிடலாம்... கொஞ்ச நாளைக்குத் தரையிலே உக்காந்து சாப்பிட்டாத் தேஞ்சிட மாட்டோம்... அப்புறம்? ஆங்... பெட்ரூமை மறந்திட்டமே! இப்ப அங்க வாங்க...

"இப்பவேவா? வந்திடட்டுமா வசந்தா?"

சிவசங்கரி

''ம்ம்... ஆசையைப்பாரு.... கட்டில்வாங்கலாமா வேணுமா?''

''அதெல்லாம் எதுக்கு? அதைப் பத்தி அப்புறமா யோசிக்கலாம்... இப்ப நீ வா...''

''இப்பவா? எங்கே மாது?''

''பெட்ரூமுக்கு வான்னு சொல்லிட்டு, ஆசையைப் பாருன்னு பழிச்சா?''

''ஜீஸஸ், என்ன மாது. இப்பக் கூட விளையாடறீங்க! சீக்கிரமா பிளான் பண்ணி முடிச்சு, நான் ஆபீஸுக்கு வேறே போகணும், தெரியுமில்லே! ஒரு மணி நேரம்தான் பர்மிஷன் போட்டிருக்கேன். இப்படி அடிக்கடி ஆபீஸ்ல டிமிக்கி கொடுத்திட்டுச் சந்திக்கறதும், சாயந்திரம் பீச்சுக்குப் போறதும் இன்னும் எத்தனை நாளைக்கு அண்ணன் கண்ணுல படாம இருக்கும்னு பயமா இருக்கு! அதுசரி, வீட்டு புரோக்கர் யாரையோ பார்க்கப் போறதாச் சொன்னீங்களே, பார்த்தீங்களா?''

''பார்த்தேன் வசந்தா.... எந்த ஏரியாவுல வீடு வேணும், எந்த மாதிரி வேணும்னு என்னென்னவோ கேக்கறாரு... எனக்கு ஒண்ணும் புரியலே...''

''இதுல புரிய என்ன இருக்கு? நம்ம ரெண்டு பேர் வாழற மாதிரி வீடு வேணும்... ரொம்ப ஜகஜகன்னு ஒண்டுக்குடித்தனமா இல்லாம, தனி வீடாகவோ, இல்லே, ஃபிளாட்டாகவோ இருந்தா நல்லது. போர்ஷன் இருந்தாக் கூடப் பரவாயில்லே. பஸ் ஸ்டாண்ட், மார்க்கெட் பக்கத்துலேயே கிடைச்சா ரொம்ப வசதி...''

''நாம செய்துக்கப் போறது ரகசியக் கல்யாணம்... அதனால, இந்த ஏரியாவை விட்டு எவ்வளவு தள்ளிப் போறோமோ அத்தனை நல்லது... உங்க அண்ணன் கண்ணுல படாம இருக்கறது பெட்டர்தானே! சுத்து வட்டாரத்துல, ரெண்டு மைல் தள்





அவன்: ''தைரியம் புருஷ லட்சணம் என்கிறது உண்மைதான்!''

இவன்: ''நீ முதல்ல லவ் லெட்டர் எழுதி லேடி டைப்பிஸ்டிடம் கொடுத்தியா?''

அவன்: ''இல்லே: அவள் கொடுத்த முதல் லவ் லெட்டரைக் கைநடுங்காம வாங்கிக்கிட்டேன்!''

— மேல்குந்தை வாக.

ளியே வீடு பார்க்கச் சொல்றேன்.''

''அ... கல்யாணம் ஆயிட்டப்புறம் யாரு என்ன செய்ய முடியும்! என்னவோ தப்புத் தண்டா பண்ணிட்ட மாதிரி யாருக்கும் தெரியாம குகைக்குள்ள போய் எதுக்காக ஒளிஞ்சுக்கணும்? நான் ஆபிஸுக்கு எப்படியும் போய்த்தானே ஆகணும்... கண்டுபிடிக்கணும்னு தீர்மானிச்சுட்டா அங்கே வந்து கலாட்டா பண்ண மாட்டாங்களா?''

''வரட்டும்... வரட்டும்... ஆபிஸ்னு நமக்கு ஆதரவா நாலு பேர் பேசுவாங்க... வீடுன்னு நாம மட்டும் தனியா மாட்டிக்கிட்டு இல்லே முழிக்கணும்! வேணாம்பா, வம்பே வேணாம்...

''என்ன மாது இப்படி பயப்படறீங்க? நம்மளைத் திட்டறவங்க மத்தியில ஜம்முன்னு வாழ்ந்து காட்ட வேணாம்?''

அதெல்லாம் அப்புறம் காட்டலாம்... இப்போதைக்கு ஒரு பிரச்னையும் வேணாம்! சரி, புரோக்கர் காட்டற வீட்டைப் பார்த்து நானே ஏற்பாடு செஞ்சிடட்டுமா?''

''ஐயோ, நான் பார்க்க வேணாமா? எனக்குத் தேவையான வசதிகள் அந்த வீட்டுல இருக்கான்னு பார்க்கணும்... எனக்குப் பிடிச்சிருந்தாத்தான் அட்வான்ஸ் கொடுக்கணும், சரியா மாது?''

''சரிதான்... ஆனா நீ எப்ப வந்து வீட்டைப் பார்க்கறது?''

''ஒரு நாள் முழுக்க ஆபிஸுக்கு லீவு போட்டுடறேன்... புரோக்கர்கிட்ட சொல்லி, விலாசமெல்லாம் வாங்கி வெச்சுக்கங்க... ஒவ்வொண்ணைப் பார்த்து முடிவு பண்ணிடலாம். அப்ப நான் கிளம்பறேன் மாது, நீங்க அப்புறமா எனக்கு போன் பண்ணுங்க...''

''என்ன மாது, இந்த வீட்டைப் பத்தியா புரோக்கர் ஓஹோன்னு அப்படி புகழ்ந்தாரு?''

''ஏன்? உனக்குப் பிடிக்கலியா வசந்தா?''

''பிடிக்கலேன்னு இல்லே... ஆனா, என்னவோ புது வீடு, இதுதான் முதல் குடித்தனம், நல்ல லொகாலிட்டின்னு கதை அளந்தாரே... இதுல ஒண்ணுகூட இந்த வீட்டுக்குப் பொருந்தலையே!''

''புது வீடுதானே இது!''

''ஆஹா... புத்தம்புது வீடு! அதான் இன்னும் சிமெண்டே பூசி முடிக்கலே! அவிசாரி அரிதாரம் பூசின மாதிரின்னு சொல்வாங்க தெரியுமா! அந்த மாதிரி சுவத்துல பூச்சு வேலையே சரியா முடியாம, வெள்ளை வெளேர்னு சுண்ணாம்பு மட்டும் அடிச்சி வெச்சிருக்கு! பாத்ரூமுக்குள்ள நுழைஞ்சா, கதவு தாழ்ப்பாள் போடத் திரும்பக் கூட முடியாது போலிருக்கு! அவ்வளவு சிறிசா இருக்கு!''

''நீ ஏன் தாழ்ப்பாள் போடறே! இருக்கப் போறது நாம ரெண்டு பேர் மட்டும் தானே?''

''ஆரம்பிச்சிட்டீங்களா? எனக்கு இந்த வீடு பிடிக்கலே மாது!''

''வசந்தா, இப்படி பாக்கற வீடுங்களை எல்லாம் பிடிக்கலே, பிடிக்கலேன்னே சொல்லிக்கிட்டிருந்தா எப்படி? நிதானமா தெருத் தெருவா போய் வீடு தேடற நிலைமையில நாம இப்ப இல்லே... காலைலேர்ந்து எத்தனை இடம் பார்த்துட்டோம்? இன்னிக்கு இது தான் கடைசி! இதுவும் பிடிக்கலேன்னா, மறுபடி புரோக்கர் கிட்டச் சொல்லி, அவரு விசாரிச்சு நமக்குச் சொல்ல இன்னும் ஒரு வாரமாவது ஆயிடும்!''

''ஆனால் என்ன? ஆபீஸ்ல சொன்ன கெடு முடிய இன்னும் பத்து நாளுக்கு மேலேயே இருக்கு... அதுக்கு அப்புறம் தானே கல்யாணமே நடக்கப் போகுது?''

''கல்யாணத்துக்காகச் சொல்லலே வசந்தா... நேத்து காஞ்சிபுரத்துலேர்ந்து அம்மா லெட்டர் போட்டிருக்காங்க...''

''என்னன்னு?''

''அப்பாவோட நண்பரைப் போய்ப் பார்த்தியா? ஆபீஸ்ல மாத்தலுக்கு எழுதிக் கொடுத்திட்டியா, எப்ப இங்கே வர்றே, உடனே நீ இங்கே வரலேன்னா, நாங்க அங்கே ஒரு நடை வந்து போறதா முடிவு பண்ணிட்டோம்னு எழுதியிருக்காங்க... ரெண்டு நாள் பார்த்திட்டு, நேர்ல தடால்னு வந்தாலும் வந்திடுவாங்க... வந்திட்டா, நாம சந்திக்கறதும், இப்படி வீடு செட்டில் பண்ண அலையறதும் கஷ்டம். அதுக்குத்தான் சொல்றேன், ஏதாவது ஒரு வீட்டை ஆச்சுன்னு ஏற்பாடு செஞ்சிடலாம்னு!''

''ம்ம்... உங்க அவசரம் எனக்குப் புரியுது... ஆனால் ஒண்ணும் சரியா அமையலியே!''

''இப்ப இதுவரைக்கும் பார்த்ததுல, இந்த வீடு எவ்வளவோ தேவலே!''

''சரி, அப்ப என்னதான் சொல்றீங்க மாது? இந்த வீட்டுக்கே அட்வான்ஸ் கொடுத்திடலாம்ங்கறீங்களா?''

''ம்ம்... அட்வான்ஸ்தான் கொஞ்சம் அதிகமாக் கேக்கறார்... நம்மால கொடுக்க முடியும்னாலும், வேறே செலவு எதையாவது குறைச்சுக்க வேண்டி வரும்...''

''வேற செலவுன்னா? இன்னும் கல்யாணச் செலவு வேறே இருக்கு... அதை யாச் சொல்றீங்க?''

## நாயகன் வருகைக்கென நங்கை இவள் காத்திருப்பது...
## நூறு ஆண்டுகளுக்கு முன்னால்.



நூறு ஆண்டுகளுக்கு முன்பாக எடுக்கப்பட்ட இந்த புகைப்படம்
தொகுப்பைச் சேர்ந்த திரு. லாலா தீன்தயாள் அவர்களின் நெகடிவ்களில் இருந்து

### இன்றும் அத்தோற்றத்தைப் பசுமையாக நினைவுகூர வைப்பது பிளாக் & ஒயிட் படங்களே!

உங்கள் குடும்ப போட்டோ ஆல்பத்தைப் புரட்டிப் பாருங்கள்!

பல்லாண்டுகளுக்கு முன் எடுத்த பிளாக் & ஒயிட் படங்கள் இன்றும் கருக்கழியாமல், மங்காமல் இருப்பதைக் காண்பீர்கள்.

அதுவே பிளாக் & ஒயிட் படங்களின் சிறப்பு! அறுபது, எழுபது ஏன் எண்பது வருடங்களானாலும் மங்காது. சொல்லவும் வேண்டுமா?

காலத்தை வென்றிடும் பிளாக் & ஒயிட் படங்களே உங்களது தேர்வாக இருக்க முடியும்.




**அழியாத நினைவுகளுக்கு காலத்தால் அழியாத பிளாக் & ஒயிட் படங்கள்!**




**இந்து பிளாக் & ஒயிட் ரோல் பிலிம் மற்றும் ப்ரோமைடுகள்.**



**கணவன்:** சட்டை பழசுன்னு எவர்சில்வர் பாத்திரம் வாங்கிட்டியே, நான் கூடத்தான் பழசா யிட்டேன்?

**மனைவி:** அவன் வரட்டும், கேட்டுப் பார்க்கிறேன். ஒரு ஸ்பூன் கூடவா தர மாட்டான்...?

— அ. தெய்வசிகாமணி.

''இல்லே வசந்தா, வீட்டுக்குக் கட்டில், பீரோன்னு ஒண்ணும் வாங்க முடியாது...''

''ப்ச்... இப்படி ஒவ்வொண்ணு குறைச்சிக்கிட்டே வந்து, வெறும் பிளாட்பாரத்துல படுத்துக்கற மாதிரி ஆயிடப் போவுது நம்ப குடுத்தனம்... சரி விடுங்க, கையில பணம் கொண்டு வந்திருக்கீங்க இல்லே? கையோட வீட்டுக்காரர்கிட்டே அட்வான்ஸ் குடுத்திட்டுக் கிளம்புங்க... இதென்ன பாக்கெட்ல? நகைப்பெட்டியா?''

''ம்... உனக்காக மோதிரம் வாங்கினேன் வசந்தா... சைஸ் சரியா இருக்கா சொல்லு...''

''கொஞ்சம் லூஸா இருக்கு... ஆனா, என்ன இது, என்னவோ டிசைன் போட்டிருக்கு?''

''என்ன அப்படிக் கேட்டுட்டே வசந்தா? இது வெறும் டிசைன் இல்லே... 'ஓம்'னு சமஸ்கிருதத்துல எழுதியிருக்கு...''

'''ஓம்'ன்ற மந்திரத்தையாச் சொல்றீங்க?''

''ஆமாம் — நான் சின்னப் பையனா இருந்தப்ப 'ஓம்' போட்ட மோதிரத்தைத்தான் ரொம்ப நாளைக்குப் போட்டிருந்தேன். எங்க தாத்தா ஊருக்கே பெரிய மனுஷனா வாழ்ந்தவரு... அவரு கையிலே எப்பவும் 'ஓம்' மோதிரம் இருக்குமாம்... 'உங்க தாத்தா மாதிரி நீயும் ஓஹோன்னு வாழணும் தம்பி'ன்னு சொல்லி, சின்ன வயசுல ஆயா செஞ்சு போட்டாங்க... அவங்க செத்துக்கப்புறம் மோதிரத்தைப் பார்க்குறப்ப எல்லாம் அவங்க நினைப்பு ரொம்ப வந்ததால கழட்டி வெச்சுட்டேன். அப்புறம் சைஸ் சின்னதாயிட்டது. இப்ப, உனக்கு மோதிரம் வாங்கக் கடைக்குப் போனப்போ, இதைப் பார்த்ததும் ஆயா, தாத்தா நினைப்பு வந்திடுச்சு... அதான் வாங்கிட்டேன்... எப்படி, நல்லா இருக்கு இல்லே?''

''ம்ம்? நல்லாதான் இருக்கு... ஆனாலும் இது தேவையான்னு தோணுது.... என் கையில இருக்கிற சிலுவை போட்ட மோதிரத்தையே உங்களுக்குப் போட்டுடட்டுமா மாது?''

''அ? அது எப்படி முடியும் வசந்தா? என் கையில சிலுவை மோதிரமா? அ... வேணாம்... அதோட சைஸ் வேற சரியா இருக்காது... பேசாம இதை அழிச்சு, புதுசா செஞ்சிடேன்...''

''சிலுவையை அழிக்கறதா? அது முடியாது... வீணா ஏன் ரெண்டு பேரும் வாக்குவாதம் செய்யணும்... அவங்கவங்க மதத்த அவங்கவங்க மதிச்சாப் போதும். மத்தவங்க மேல திணிக்க வேணும்னு தீர்மானிச்சிருக்கறதை அப்பப்ப ஏனோ மறந்திடறோம். பேசாம நீங்க வாங்கின மோதிரத்தை நீங்களே போட்டுக்கங்க, என் கையில இருக்கறது அப்படியே இருக்கட்டும்!''

''அப்ப கல்யாணத்தன்னிக்கு என்ன செய்யறது?''

''மனசுப் பொருத்தம் பத்தாதா மாது? இந்த வெளி அலங்காரமெல்லாம் எதுக்கு? வேணும்னா, ரெண்டு பேரும் மோதிரத்தைக் கழட்டி வெச்சிட்டு, அன்னிக்குத்தான் புதுசா போட்டுக்கற மாதிரி போட்டுக்கிடலாம்... என்ன?''

''இருந்தாலும் வசந்தா...''

''தயங்காதீங்க மாது... வீட்டுக்காரர் கிட்ட போய்ப் பணத்தைக் குடுத்திட்டு வந்திடுங்க... அப்புறம் ரெண்டு நாளு கழிச்சு உங்க லாட்ஜ் ரூமைக் காலி பண்ணி, சாமான்களை இங்கே கொண்டு வெச்சிடுங்க...''

சந்தேகம் இல்லாமல் அவள் பேசியதும், மாதவன் பணத்தைக் கொண்டு போய் வீட்டுக்காரரிடம் கொடுத்துவிட்டு வந்தான்.

இரண்டு நாட்கள் கழித்து, வசந்தா சொன்னது போல், லாட்ஜ் ரூமை ஒழித்து, சாமான்களை மாணிக்கத்தின் ஆட்டோவில் ஏற்றிக் கொண்டு வந்து புது வீட்டில் இறக்கினான்.

ஞாயிற்றுக்கிழமையாக இருந்தால் சர்ச்சுக்குப் போக வேண்டி வரும், அதனால் யாருக்கும் சந்தேகம் எழாத மாதிரி ஒரு சனிக்கிழமை திருமணத்தை வைத்துக் கொள்ளலாம் என்று வசந்தா சொன்னதை ஏற்றான்.

முத்துவேலும் மாணிக்கமும் இவனுக்குத் துணையிருக்க, வசந்தாவுக்கு அவள் அலுவலகத் தோழி ஒருத்தி கூட நிற்க, அந்தச் சனிக்கிழமை காலை பதினொரு மணி அளவில் பதிவுத் திருமண அலுவலகத்தில் தங்கள் திருமணத்தைப் பதிவு செய்து கொண்ட பின் 'ஓம்' மோதிரத்தை வசந்தா மாதவனுக்கும், சிலுவை மோதிரத்தை அவன் அவளுக்கும் அணிவிக்க, கூட இருந்த மூன்று நண்பர்களும் ''கங்க்ராட்ஸ்'' என்று வாழ்த்த, வேறு எந்தச் சடங்குகளும் இன்றித் தம்பதியானார்கள்.

(தொடரும்)

# அமெரிக்க சுவாமி நிறுவிய ஆறுமுகன் கோயில்

— கார்த்திகைத் திருநாள் சிறப்புக் கட்டுரை



ஸான்பிரான்ஸிஸ்கோவில் ஒரு பின் மாலைப் பொழுது. இரவு எட்டு மணிக்குக் கூட அந்திவானத்தில் ஒளி பரவி இருக்கிறது. ஜன நடமாட்டம் அதிகமில்லாத தெரு. அதில் நெருக்கமான கட்டிடங்கள். அவற்றுள் ஒன்றை நெருங்குகிறோம். கனமான கதவைத் திறந்து கொண்டு உள்ளே செல்லும் போது பாரத நாட்டுக் கோயில்களுக்கே உரிய நறுமணம் நம்மை வரவேற்கிறது. திடீரென்று தமிழகக் கோயில் ஒன்றினுள் நுழைந்துவிட்ட உணர்வு. ஆனால் ஒரு மிகப் பெரிய வித்தியாசம் — அப்பழுக்கு இல்லாத தூய்மை. மந்திர ஒலி தவிர வேறு பேச்சுக் குரல் இல்லை. அன்பர்கள் சிலர் மெய்மறந்து அமர்ந்திருக்கிறார்கள். நாம் உள்ளே வருவதே அவர்களுடைய நிஷ்டையைக் கலைத்து விடுமோ என்று அச்சமாக இருக்கிறது. ஓரிரு நிமிடங்களில் நாமும் அந்தச் சூழ்நிலையில் ஒன்றி விடுகிறோம்.

ஸந்தி பூஜை நடந்து கொண்டிருக்கிறது. முருகப் பெருமானுடைய நூற்றியெட்டுத் திருநாமங்கள் நமது செவிகளில் அமுதமாகப் பாய்கின்றன. குண்டு குண்டான ரோஜா மலர்கள் முருகனை அலங்கரிக்கின்றன. அந்த அலங்காரத்தில் கலையழகோடு சிரத்தையும் மிளிர்கிறது.

நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகு குண்டலமும்
ஆறிரு திண்புயத்து அழகிய மார்பில்
பல்பூஷணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்
முப்புரி நூலும் முத்தணி மார்பும்'

என்ற கந்தர் சஷ்டி கவச வரிகள் நினைவுக்கு வருகின்றன. அத்தனை அலங்காரமாகக் காட்சியளிக்கிறார் கந்தபெருமான்.

தீபாராதனை நடக்கிறது. முருகப் பெருமானுக்கு மூத்தவர் அருகிலிருந்து அருள் சொரிகிறார். மத்தியில், அலங்கரிக்கப்பட்ட சிவலிங்கம். அதன் பின்னால் ஒரு முனிவரின் படம் — மென்மையான ஒளி பரவி மனம் குவியச் செய்கிறது.

நம்மை அதிசயத்தில் ஆழ்த்துபவர் பூஜை செய்யும் அர்ச்சகர். மந்திரங்களை, நிதானமாக, சுத்தமாக உச்சரித்து, மணி அடித்துக் கொண்டே வலது கையால் தீபாராதனை செய்கிறார். அவர் அமெரிக்கர் என்று நம்பவே முடியவில்லை. திருநீறும் மலர்களும் பிரஸாதமாக அளிக்கிறார் திருநாதஸ்வாமிஜி.

"மயில் நடம் இடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவ ஓம்"

என்ற கந்தர் சஷ்டி கவச அடிகளை மனத்துக்குள் உச்சரித்தபடி பிரஸாதங்களைப் பெற்றுக் கொள்கிறோம். பிறகு கோவிலைப் பற்றித் திருநாதஸ்வாமிஜியிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறோம்.

இலங்கையில் யோகஸ்வாமி என்ற குரு இருந்தார். பாலே நடனம் பயின்று வந்த ஓர் அமெரிக்கர் அவரிடம் வந்து சேர்ந்தார். இதைத்தான்,

விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு—முன்னம்
விட்ட குறை வந்து தொட்டாச்சு என்று

கோபாலகிருஷ்ண பாரதியார் பாடினார் போலும். அமெரிக்க இளைஞருக்கு ஆன்மிகத்தில் உள்ள ஈடுபாட்டையும், சிரத்தையையும் கண்டு கொண்ட யோக ஸ்வாமிகள், அந்தக் கலைஞருக்கு உபதேசம் செய்து சீடராக ஏற்றுக் கொண்டார். சைவ சித்தாந்தத்தில் பயிற்சி அளித்தார். அவருக்கு சிவாய சுப்ரமுனிய சுவாமி என்ற திருநாமத்தைச் சூட்டி 'சைவ சமயத்தை உன் நாட்டில் தொடங்கி உலகெங்கும் பரவச் செய்' என்று பணித்தார்.

குருவின் ஆணையைச் சிரமேற் கொண்ட சிவாய சுப்ரமுனிய சுவாமிகள் ஸான்

பிரான்ஸிஸ்கோ நகரத்துக்கு வந்து சேர்ந்தார். என்ன செய்வது என்று மயங்காமல், உடனே ஸாக்ரமான்டோ என்ற இடத்தில் கணபதியைப் பிரதிஷ்டை செய்து ஆகம முறைப்படி பூஜைகள் நடத்த ஏற்பாடுகள் செய்தார்.

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னல் அதே இடத்தில் முருகப் பெருமானுடைய சிலையையும் பிரதிஷ்டை செய்து பழனி சுவாமி கோவில் என்று அவ்விடத்தை அழைக்க ஆரம்பித்தார்கள். கோவிலில் ஆசார சீலத்துடன் அவர்கள் செய்யும் பூஜையைப் பார்க்கப் பார்க்கத் திகட்டவில்லை.

சிவாய சுப்ரமுனிய சுவாமிக்கு மேலும் மேலும் பணிகள் தொடர்ந்து வந்தன. ஹவாய் தீவுகளில் அழகு கொழிக்கும் காபா என்ற தீவில் சிவபெருமானுக்குக் கோவில் எழுப்பியிருக்கிறர். நடராஜ மூர்த்தியின் 108 கரண படிமங்களை அங்கே ஸ்தாபித்திருக்கிறர். சைவ சித்தாந்தா சர்ச் என்ற சைவ மடத்தை நிறுவியிருக்கிறர்.

ஹவாயிலும் சைவ சமயப் பற்றுள்ள பல அமெரிக்கர்கள் இருக்கிறர்களாம். வடமொழி, தமிழ் மொழி பயில்கிறர்களாம். தேவாரம், திருவாசகம் ஓதுகிறர்களாம். ஆசார நியமங்களைக் கடைப்பிடிக்கிறர்களாம்.

இங்கே சிவலிங்கத்தின் பின்னல் உள்ள படம் சிவாய சுப்ரமுனிய சுவாமிகளின் போட்டோ என்று கூறுகிறர் திருநாத சுவாமிகள். இறைபக்தியும் குருபக்தியும் உள்ளத்தில் தரித்து, ஜரிகை வேட்டி உடுத்தி, தூய்மையின் வடிவமான ஒற்றை ஸ்படிகம் கழுத்தில் தரித்து, விபூதி, குங்குமம் அணிந்து சிவப்பழமாக விளங்குகிறர், திருநாத சுவாமிஜி.

இவர்களுடைய சைவப்பணி இதோடு நிற்கவில்லை. அன்பர்களுக்காகச் சில தொண்டுகள் செய்கிறர்கள். முக்கியமாகப் பள்ளிக்கூடம் நடத்துகிறர்கள். குழந்தைகளுக்குக் கணபதி, முருகன் முதலிய தெய்வங்களைப் பற்றிய கதைகள் சொல்லுகிறர்கள். இந்து சமயத்தில் பற்றுள்ளவர்களாகக் குழந்தைகள் மலர வேண்டும் என்று சமயக் கல்வி போதிக்கிறர்கள். நைவேத்தியம் பண்ணிவிட்டுச் சாப்பிட வேண்டும் என்று பழக்கப்படுத்தியிருக்கிறர்கள். சுத்தமும் சீலமும் முக்கியமென்று கற்றுத் தருகிறர்கள்.

ஆண்டுதோறும் சைவ சித்தாந்தா சர்ச்சிலிருந்து பக்தர்கள் இந்தியாவுக்கு வருகிறர்கள். தமிழ்நாட்டில் ஆறுபடை வீடுகளுக்கும் சென்று தரிசனம் செய்கிறர்கள். சிதம்பரம் சென்று நடராஜ மூர்த்தியைச் சேவிக்கிறர்கள். இவர்களுக்கு இதுதான் விடுமுறை! அமெரிக்க ஸ்வாமிகள் இவ்வளவு பக்தி சிரத்தையுடன் இருப்பதும், நமது சமயத்தில் இவ்வளவு பற்று வைத்திருப்பதும், ஆசார சீலத்துடன் மடத்தில் வாழ்வதும் சமயப் பற்று உள்ள வைதீகப் பெருமக்கள் அனைவரும் பெருமைப்படக் கூடிய விஷயம்.

ஆறுமுகப் பெருமானுடைய திருத்தலங்களில் ஸான் பிரான்ஸிஸ்கோவையும், காபா தீவையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது!

—ஆனந்தி

---

# மாதம் ஒரு மாவட்டம்

கல்கி ஏந்தும் சமுதாயப் பணி

**மீண்டும் இராமநாதபுரம், திருச்சி, வடாற்காடு மாவட்டங்களுக்கு வருகிறேம்!**

**கடந்த ஏப்ரல், மே, ஜுலை மாதக் கல்கி இதழ்களில் இராமநாதபுரம், திருச்சி, வடாற்காடு மாவட்டங்களிலுள்ள பல பிரச்னைகள் பற்றி எழுதியிருந்தோம். அப்போதைய திருச்சி மாவட்டக் கலெக்டர் தவிர, இராமநாதபுரம், வடாற்காடு மாவட்டக் கலெக்டர்கள் இருவரும் அவரவர் மாவட்டப் பிரச்னைகள் தொடர்பாக அளித்த பேட்டியையும் வெளியிட்டிருந்தோம்.**

**இப்போது அந்தப் பிரச்னைகளெல்லாம் எந்த அளவில் உள்ளன? தீர்வு காணப்பட்டனவா, இல்லையா? தீர்வு காணப்பட்டவற்றையும் எழுதுங்கள்; தீர்வு காணப்படாதவற்றையும் எழுதுங்கள்.**

**மறுபடியும் நமது நிருபர்கள் வரும் ஜனவரி மாதத்தில் இந்த மூன்று மாவட்டங்களுக்கும் ரீ—விசிட் செய்ய வருகிறர்கள்.**

**கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.12.87.**
**உடனடியாக எழுதி அனுப்புங்கள்.**

**– ஆசிரியர்**



அலாரம் அடித்தது. ஐந்து மணி. தூக்கம் கலைந்து எழுந்தேன். கை அனிச்சையாக அலாரத்தை நிறுத்தியது. பிறகு சிறிது நேரம் எழுந்திருக்க மனமில்லாமல் படுக்கையிலேயே கிடந்தேன். கண்கள் எரிச்சலைக் கொட்டின. கட்டிலுக்குக் கீழே




மனைவியும் மூன்று மாத கைக்குழந்தையும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர். இரவு முழுக்க 'கரண்ட்' இல்லை. வீட்டில் விளக்கில்லாமல் தடுமாறி இரவு உணவு உண்டு விட்டுப் படுக்க நேரமாகி விட்டது. மின் விசிறி இல்லாமல் கொசுக்களின் ரீங்காரம். குழந்தை அடிக்கடி தூக்கம் கலைந்து அழுதது. அதன் ஒவ்வொரு சிணுங்கலுக்கும் நான்தான் எழுந்திருக்க வேண்டியிருந்தது. ஒவ்வொரு முறை தூக்கம் கலைந்த பின்பும் மறுபடியும் தூக்கம் பிடிக்க வெகு நேரமாகியது. என் மனைவியைப் பார்க்கையில் எரிச்சலாக வந்தது. "எப்படித்தான் தூங்குகிறாளோ?" தலைக்குத் தலையணையைக் கொடுத்தவுடன் அடுத்த நிமிடமே உறங்கிப் போனாள்!

ஆயிற்று... இப்போதே பையைத் தூக்கிக் கிட்டு ஓடினால்தான் பாக்கெட் பால் கிடைக்

# வெளிச்சம்

ஏ. அலீம்

கும். குழந்தைக்கு இந்தப் பால் தவிர வேறு பால் ஒத்துக் கொள்வதில்லை. மேலும் நானிருக்கும் இந்த ஏரியாவில் ஒரே மாதிரி பால் ஊற்ற யாரும் வருவதில்லை. தவிர, ஐந்து நிமிட நடையில் 'பால் பூத்' இருக்கிறது.

பால் வாங்கி வந்ததும் பல் துலக்கிக் குளிர்ந்த நீரில் முகம் கழுவினேன். கண் எரிச்சல் இன்னும் அதிகமாக ஆனதே ஒழியக் குறையவில்லை. என் மனைவி இன்னும் எழுந்திருக்கவில்லை. இப்போதே அவளை எழுப்பினால்தான் 'மடமட' என்று அவள் வேலைகளை முடித்து, நான் ஆபீஸுக்கு ஓடச் சரியாக இருக்கும். மனைவியை எழுப்பினேன்.

''நான் போய்க் காய் வாங்கிக்கிட்டு வர்றேன்'' — மறுபடி பையைத் தூக்கிக் கொண்டு நடந்தேன். குளிர்ந்த காலைக் காற்று வீச, குழந்தை அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தது.

மார்க்கெட்டுக்குப் போய் எனக்குப் பிடித்த வெண்டைக்காய் வாங்கி வந்தேன். மணி ஏழாகியிருந்தது. குளித்து, சாப்பிட்டு விட்டுச் சோற்றை அள்ளி டிபன் பாக்சில் அடைத்துக் கொண்டு இப்போது கிளம்பினால் எட்டரை மணி பஸ்ஸைப் பிடித்து ஆபீஸ் போகச் சரியாக இருக்கும். வேகமாக இயங்க ஆரம்பித்தேன். நடுவில் குழந்தை எழுந்து பாலுக்காக அழவே, ''ஏங்க இந்தப் பொரியலைக் கொஞ்சம் பாருங்க'' என்று சொல்லிவிட்டுக் குழந்தையைக் கவனிக்க மனைவி போனாள். நான் அவசர அவசரமாகச் சமையலறையில் நுழைவதற்குள் பொரியல் முழுக்கத் தீய்ந்து போய் விட்டது. எனக்கு எரிச்சல் அதிகமாயிற்று.

''போச்சு, எல்லாம் வேஸ்ட்!'' என்று சத்தம் போட்டேன். எனக்குத் தெரியும் — இன்று நாள் முழுக்க இப்படித்தான் இருக்கப் போகிறது. ஒருவழியாக அரை வயிறு சாப்பிட்டு விட்டுக் கிளம்பி ஓடினேன்.

பஸ் ஸ்டாண்டில் எனது வழக்கமான பஸ் இல்லை — பஞ்சரென்றது. அருகிலுள்ள மாரியம்மன் கோவில் சந்தில் நுழைந்து ஓடி, மெயின் ரோடை அடையவும், ஸ்டாண்டைச் சுற்றிக் கொண்டு பஸ் வரவும் சரியாக இருந்தது.

பஸ்ஸில் ஏறி ஆசுவாசப்படுத்திக் கொண்டேன்.

''சே! என்ன இயந்திரத்தனமான வாழ்க்கை! ஒரே மாதிரி சாப்பிட்டு, தூங்கி, ஆபீஸ் போய், நாற்காலியைத் தேய்த்துக் கொண்டு...'' சலிப்பான எண்ணங்கள் மனத்திரையில் ஓடின.

இது மாதிரி எண்ணங்கள் மேலோங்கும் போது எனக்கு நானே நினைத்துக் கொள்வதுண்டு — வாழ்க்கையில் சலிப்பு வரக் கூடாது. வாழ்வில் எத்தனையோ சின்னச் சின்ன ரசிக்கத் தக்க சம்பவங்கள் நடந்து கொண்டேயிருக்கின்றன. இதோ பார், முன் சீட்டில் ஜொள்ளு ஒழுகிக் கொண்டு அயர்ந்து தூங்கும் குழந்தையைப் பார்; விருட் விருட் என்று பின்னோக்கி ஓடும் மரங்களைப் பார்; அவரவர் நிமித்தம் காரியமாற்றப் பரபரக்கும் மனிதர்களைச் சற்றே தள்ளி நின்று ரசித்துப் பார் — ஒரு சுகம் தெரியும்!

ஆனால் இன்றைக்கு மூட் அவுட் ஆனது ஆனதுதான். ஒன்றும் செய்ய முடியாது போலிருந்தது. என் ஆபீஸ் இருந்த ஊர் நெருங்கிக் கொண்டிருந்தது.

பஸ் நான் படித்த கல்லூரியைக் கடந்தது. எனக்குள் பழைய நினைவுகள், அடம் பிடித்து அழும் குழந்தையெனத் திமிறிக் கொண்டு எழுந்தன. நான் படித்த கல்லூரியின் அப்போதைய தோற்றம், கல்லூரி வளாகச் சுவரின் மேல் அமர்ந்து கொண்டு அரட்டை அடித்த நண்பர் குழாம், இலக்கியம் கவிதையென இரவு கண்விழித்து, சிகரெட் பிடித்து உரையாடிக் கழித்த இரவுகள், இவையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அணிவகுத்து வந்தன.

'நானா வேலை கிடைத்து உடன் கல்யாணம் செய்து இப்படி அடியோடு மாறிப் போனேன்?

'நானா இப்படி யதார்த்தம் என்ற முனையில் கட்டப்பட்ட செக்குமாடாய்த் தினம் உழன்று கொண்டிருக்கிறேன்?'

பஸ்ஸை விட்டிறங்கி விடுவிடு என நடந்து ஆபீசுக்குள் நுழைந்தேன். நுழைந்த

தும்தான் நேற்றைய தேதியில் வந்த ஆடிட் குழுவின் நினைவு வந்தது. அவ்வளவுதான். இன்று வேலை பின்னி எடுத்துவிடும் என நினைத்துக் கொண்டே வேலையை ஆரம்பித்தேன். ஆபீஸ் எங்கும் தூசி. பழுப்பேறிய, உயிர்ப்பில்லா அரசாங்கக் காகிதங்கள். இவற்றோடு புழங்கி எனக்குப் பழக்கமாகி விட்டது.

மணி பன்னிரண்டு இருக்கும். எனது செக்ஷன் தலைமை எழுத்தர் வந்தார். "இந்தாப்பா... நேற்றே தபால்ல வந்தது — சர்க்கிள் ஆபிஸில் ஆறு வருஷத்துக்கான ஸ்டேடிஸ்டிகல் ரிப்போர்ட் கேட்டிருக்கான்! இன்னிக்குச் சாயந்திரத்துக்குள் அனுப்ப வேண்டும். நாலு மணிக்குள் போட்டனுப்பு" என்று சொல்லிவிட்டுப் போனார்.

மதியம் இடைவேளையில் போய்ச் சாப்பிட்டுவிட்டு வந்ததும் அந்த ஸ்டேட்மெண்ட் போட ஆரம்பித்தேன். வெறும் எண்களையே கூட்டிப் பெருக்கிப் போட்டு முடிக்க மாலை மூன்று மணியாகி விட்டது. நான் பயந்த மாதிரியே உடல் சோர்வும் தலைவலியும் வந்துவிட்டன. அவ்வளவுதான். இனி ஒன்றும் செய்ய முடியாது! நெற்றிப் பொட்டில் ஆரம்பித்து, பின் மண்டை வரை வலி தெறிக்கும். எந்த மாத்திரைக்கும் கட்டுப்படாது. முன்பே பலமுறை தலைவலிக்காக டாக்டரிடம் போனேன். அவர் என்னைப் பரிசோதித்துவிட்டு "கண்ணாடி போட்டுக்குங்க" என்றார். இந்த மாசம் போட்டுக்கலாம், அடுத்த மாசம் போட்டுக்கலாம் என்றே ஆறு மாதங்களுக்கு மேலாகி விட்டது. இன்னும் நான் கண்ணாடி போட்டபாடில்லை. என்ன செய்வது? வரவுக்கும் செலவுக்கும் நடக்கும் கண்ணாமூச்சி ஆட்டம் என்றுதான் ஓயப் போகிறதோ?

ஒருவழியாக வேலைகளை முடித்துவிட்டு நிமிர்ந்த போது மணி ஐந்தரையாகிவிட்டிருந்தது. மறுபடியும் பஸ் பிடித்து, கசங்கி, வீடு போய்ச் சேர்ந்தேன். கரெண்ட் இன்னும் வரவில்லை! மனைவி சுடச் சுட காப்பி போட்டுக் கொடுத்தாள். "என்னங்க ஆபீஸில் வேலை அதிகமோ? 'டல்' ஆக இருக்கிறீங்க?" என்று கேட்க, நான் ஒன்றும் பேசாமல் காப்பி குடித்து முடித்து, படுக்கையில் மல்லாந்தேன். தலைவலி சிறிது குறைந்திருந்தது.

காலையில் எழுந்தது முதல் நடந்தவை ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன. எல்லாம் வழக்கம் போலத்தான் நடந்து முடிந்தன. எனக்குத்தான் 'மூட் அவுட்'. அதனால்தான் எல்லாமே எரிச்சலூட்டும்படியாக இருந்தனவோ? என் மனைவிதான் என்ன செய்வாள்? தினமும் வீட்டுக்குள்ளேயே வலம் வந்து கொண்டிருக்கிறாள். மாதம் ஒரு முறை சினிமாவுக்குக் கூட்டிக் கொண்டு போனால் அதுவே அதிசயம். காலையில் அனாவசியமாக அவளைத் திட்டி விட்டேனே?

கீழே பாயில் படுத்துக் கொண்டிருந்த குழந்தை மழலையாகப் பிதற்றியது. நான் கீழிறங்கி அதனருகில் அமர்ந்தேன். அது இரு கைகளை நீட்டி, பொக்கை வாயால் சிரித்தது. என் கைகள் என்னையுமறியாமல் குழந்தையைத் தூக்கி மடியில் போட்டுக் கொண்டன. 'இந்த ஒரு சிரிப்புக்காக எத்தனை கஷ்டங்களையும் தாங்கிக் கொள்ளலாமே! எதற்காக நாம் சலித்துக் கொண்டோம்?'

அணைக்க ஒரு நோஞ்சான் மனைவி
வளர்க்க இரு நோயுள்ள சேய்கள்
செய்ய ஒரு பிடிப்பில்லாத் தொழில்
இருக்க ஒரு வாடகை வீடு
இருந்தும்,
உலகம் ஏனோ இன்னும்
கசக்கவில்லை.

முன்பு எப்போதோ படித்த கவிதை வரிகள் நினைவிற்கு வர, சிரிப்பு வந்தது. குழந்தையைத் தூக்கிக் கொஞ்ச ஆரம்பித்தேன். சொல்லி வைத்தாற் போல் கரெண்ட் வந்தது. வீடு வெளிச்சத்தால் நிரம்பியது — எனது மனமும் கூடத்தான்.

அமைச்சர்: "வறட்சி நிவாரண நிதிக்கு ஐம்பது லட்ச ரூபாய் வசூல் ஆகியிருக்கு! என்ன செய்யலாம் இதை?"

மற்றொரு அமைச்சர்: "நாம், வறட்சி நிவாரணப் பணி நடத்தறதைக் காட்டற மாதிரி நாற்பத்தைந்து லட்ச ரூபாய்க்கு 'கலர்'லே ஒரு சினிமா எடுப்போம்! மீதியை 'நிவாரணப் பணி'க்கு வெச்சுக்குவோம்!"

— சம்பத்குமாரி.






## அத்தியாயம் 34

# அநுராதபுரம்



சூரியன் அஸ்தமனமாகும் சமயத்தில் அவர்கள் அநுராதபுரத்தை அணுகினார்கள். இலங்கைத் தீவின் தொன்மைமிக்க அத்தலை நகரத்தைச் சற்றுத் தூரத்திலிருந்து பார்த்தபோதே வந்தியத்தேவன் அதிசயக் கடலில் மூழ்கிப் பேசும் சக்தியை இழந்தான். அநுராதபுரத்தைப் பற்றி அவன் பலர் சொல்லக் கேள்விப்பட்டதுண்டு. அந்நகரைப் பற்றி அவர்கள் செய்த வர்ணனைகளிலிருந்து அதன் தோற்றம் இப்படி இருக்குமென்று அவன் கற்பனை செய்து பார்த்ததும் உண்டு. ஆனால் அவனுடைய கற்பனைகளையெல்லாம் அந்த மாநகரம் மிஞ்சியதாயிருந்தது. அம்மம்மா! இதன் மதில் சுவர்தான் எத்தனை பெரியது? எப்படி இருபுறமும் நீண்டு கொண்டே செல்கிறது? எந்த இடத்திலே அச்சுவர் வளைந்து திரும்புகிறது என்று தெரிந்து கொள்ளவும் முடியவில்லையே? மதில் சுவருக்கு உள்ளே எத்தனை எத்தனை கோபுரங்களும் ஸ்தூபங்களும் மண்டப சிகரங்களும் தலை தூக்கிக் கம்பீரமாக நிற்கின்றன? ஒன்றுக்கொன்று அவை எவ்வளவு தூரத்தில் நிற்கின்றன? இவ்வளவும் ஒரே நகரத்துக்குள்ளே, ஒரே மதில் சுவருக்குள்ளே, அடங்கியிருக்க முடியுமா? காஞ்சி, பழையாறை, தஞ்சை முதலிய நகரங்களெல்லாம் இந்த மாநகரத்தின் முன்னே எம்மாத்திரம்? அசோக சக்கரவர்த்தியின் காலத்தில் பாடலிபுத்திரமும் விக்ரமாதித்தனின் ஆட்சியில் உஜ்ஜயினி நகரமும் கரிகால் வளவன் காலத்தில் காவேரிப்பட்டினமும் ஒருகால் இந்த நகரத்தைப் போல் இருந்திருக்கலாம்! தற்காலத்தில் உள்ள வேறு எந்தப் பட்டணத்தையும் இதற்கு இணை சொல்ல முடியாது!......

மதில் சுவரும் அதன் பிரதான வாசலும் நெருங்க, நெருங்க, நகரை நோக்கிச் செல்வோரின் கூட்டம் அதிகமாகி வந்தது. தமிழர்களும் சிங்களவர்களும் பிக்ஷுக்களும் இல்லறத்தாரும் ஆண்களும் பெண்களும் சிறுவர் சிறுமிகளும் பெருங்கூட்டமாகச் சென்றார்கள். எல்லாரும் தேர் திருவிழாவுக்குச் செல்கிறவர்களைப் போல் குதூகலமாகச் சென்றார்கள். அவர்களில் ஒரு சிலர் நமது பிரயாணிகள் மூவரையும் கவனிக்கவும் சுட்டிக் காட்டவும் தொடங்கினார்கள். இதைக் கண்டதும் பொன்னியின் செல்வர் மற்ற இருவருக்கும் சமிக்ஞை செய்துவிட்டு, இராஜ

அமரர் கல்கி

பாட்டையிலிருந்து விலகிக் குறுக்கு வழியில் சென்றார். மரங்களால் மறைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய செய்குன்றத்தின் அடிவாரத்தில் வந்து குதிரையை நிறுத்தினார். பின் தொடர்ந்து வந்த இருவரையும் பார்த்து, "குதிரைகள் வெகுதூரம் வந்திருக்கின்றன. சற்று நேரம் இளைப்பாறட்டும். நன்றாக இருட்டிய பிறகு நகருக்குள் போவோம்!" என்றார்.

குதிரைகள் மீதிருந்து மூவரும் இறங்கி ஒரு கற்பாறை மீது உட்கார்ந்தார்கள்.

"இவ்வளவு கூட்டமாக ஜனங்கள் போகிறார்களே? இன்றைக்கு இந்த நகரத்திலும் ஏதாவது உற்சவமோ?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"இந்தநாட்டில்நடக்கும்திருவிழாக்களுக்குள்ளே பெரிய திருவிழா இன்றைக்குத்தான்!" என்றார் இளவரசர்.

"ஈழநாட்டில் ஏதோ யுத்தம் நடக்கிறது என்று கேள்விப்பட்டேன். இங்கே வந்து பார்த்தால் ஒரே உற்சவமாயிருக்கிறதே!" என்றான் வந்தியத்தேவன்.

"பழையாறையில் ஸ்ரீஜயந்தி உற்சவம் நடந்தது என்று நீர் சொல்லவில்லையா?"

"ஆமாம்; ஆனால் பழையாறை சோழ நாட்டில் இருக்கிறது......"

"அநுராதபுரம் ஈழ நாட்டில் இருக்கிறது. அதனால் என்ன? சோழ நாட்டிலும் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் ஆட்சிதான்; ஈழ நாட்டிலும் அவருடைய செங்கோல் ஆட்சிதான்......!"

"ஆனால் இந்த நாட்டில் இன்னும் பகைவர்கள் இருக்கிறார்களாமே!..."

"பகைவர்கள் எங்கேயோ இருக்கிறார்கள். அதற்கு, இங்குள்ள ஜனங்கள் என்ன செய்வார்கள்? போர்க்களத்தில் போர் நடக்க வேண்டியதுதான்; ஊர்ப்புறத்தில் உற்சவமும் நடக்க வேண்டியதுதான்!...... திருமலை! நீ என்ன சொல்கிறாய்?" என்றார் இளவரசர்.

"இங்கே வெளிப் பகைவர்கள் இருந்தால் அங்கே உட்பகைவர்கள் இருக்கிறார்கள். வெளிப்பகைவர்களைக் காட்டிலும் உட்பகைவர்களே அபாயமானவர்கள். ஆகையால் இளவரசர் இந்த நாட்டிலேயே உற்சவமும் யுத்தமும் நடத்திக் கொண்டிருப்பதே நல்லது என்று அடியேன் சொல்லுகிறேன்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"அழகாய்த்தானிருக்கிறது. வெளிப்பகைவர்களை விட உட்பகைவர்களே அபாயகரமானவர்கள் என்றால், அங்கேதானே நம் இளவரசர் இருக்க வேண்டும்? அபாயம் அதிகம் உள்ள இடமே வீரபுருஷர்கள் இருக்க வேண்டிய இடம் அல்லவா?" என்றான் வந்தியத்தேவன்.

"வீரம் என்றால், அசட்டுத்தனமாகச் சதிகாரர்களிடமும், கொலைகாரர்களிடமும் போய் அகப்பட்டுக் கொள்ள வேண்டும் என்று அர்த்தமா? வீராதி வீரனாகிய நீ அங்கே போய் அப்படி அகப்பட்டுக் கொள்வதுதானே? எதற்காகத் தப்பி ஓடி வந்தாய்?" என்றான் திருமலை.

"போதும்! போதும்! நீங்கள் ஒரு யுத்தம் இங்கே ஆரம்பித்துவிட வேண்டாம்!" என்று அருள்மொழி வர்மர் சமாதானம் செய்வித்தார்.

இருட்டிய பிறகு மூன்று பேரும் அந்நகருக்குள் பிரவேசித்தார்கள். அன்று யாத்திரீகர்கள் யாரையுமே கோட்டை வாசலில் தடுத்து நிறுத்தவில்லை. எல்லாரையும் தங்கு தடையின்றி விட்டுக் கொண்டிருந்தார்கள். காவலர்கள் சும்மா நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். கூட்டத்தோடு கூட்டமாக நம் கதாபுருஷர்கள் மூவரும் நகருக்குள் பிரவேசித்துச் சென்றார்கள்.


நுராதபுரத்தின் வீதிகளிலும் ஜனக்கூட்டம் அளவில்லாமலிருந்தது. "சாது! சாது!" என்ற கோஷம் வானை அளாவியது. ஆங்காங்கு பல மாட மாளிகைகளும் விஹாரங்களும் இடிந்து கிடப்பதை வந்தியத்தேவன் கண்டான். இடிந்து போன பல கட்டிடங்கள் புதுப்பிக்கப்பட்டிருப்பதையும் பார்த்தான். புதுப்பிக்கும் திருப்பணி இளவரசர் கட்டளையின் பேரிலேதான் நடந்திருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். இப்படியெல்லாம் இவர் செய்து வருவதின் நோக்

கம் என்ன? ஜயிக்கப்பட்ட நாட்டின் மக்களுக்கு இவர் ஏன் இவ்வளவு சலுகை காட்டுகிறார்? ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழகத்துடன் அடிக்கடி சண்டை போட்டு வருகிறார்கள் இந்தச் சிங்கள அரசர்கள். இத்தகைய நெடுங்காலப் பகைவர்களின் தலைநகரத்தை அழித்துக் கொளுத்தித் தரைமட்டமாக்குவதற்கு மாறாக, இடிந்து போன கட்டிடங்களைப் புதுப்பித்துத் திருவிழாக்கள் நடத்த இவர் அனுமதித்து வருகிறாரே? இது என்ன அதிசயம்! இதில் ஏதோ மர்மம் இருக்கத்தான் வேண்டும். அது என்னவாயிருக்கும்? வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் ஒரு விந்தையான எண்ணம் உதித்தது. ஆம், ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும். சோழ நாட்டில் இவருக்கு உரிமை எதுவும் இல்லை. பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலர் இருக்கிறார். அவருடன் போட்டியிட மதுராந்தகத்தேவர் இருக்கிறார். ஆகையால் இந்த மா இலங்கைத் தீவில் இவர் ஒரு தனி ராஜ்யத்தை ஸ்தாபித்துச் சுதந்திர மன்னராக விரும்புகிறார் போலும்! — யார் கண்டது? இவருடைய விருப்பம் நிறைவேறினாலும் நிறைவேறலாம்! குடந்தை ஜோசியர் சொன்னார் அல்லவா? "அருள்மொழிவர்மர் துருவ நட்சத்திரம் போன்றவர்! அவரை நம்பினவர்களுக்கு ஒரு குறைவும் இல்லை!" என்று. அத்தகைய வீர புருஷரிடம் தான் வந்து சேர்ந்து விட்டதை நினைத்து அவனுடைய உள்ளம் மகிழ்ச்சியால் பூரித்தது.

வெளிப்புறங்கள் இடிந்து இருளடைந்திருந்த ஒரு பழைய மாளிகையின் வாசலில் வந்து அவர்கள் நின்றார்கள். குதிரைகளின் மீதிருந்து இறங்கினார்கள். அந்த இடம் முக்கியமான வீதிகளிலிருந்து சற்று ஒதுக்குப்புறமாக இருந்தது. ஆகையால் அங்கே ஜனக் கூட்டம் இல்லை. இளவரசர் மூன்று தடவை கையைத் தட்டினார். உடனே இந்திர ஜாலத்தினால் நடந்தது போல் அந்த மாளிகையின் ஒரு பக்கத்தில் கதவு திறந்து வழி உண்டாயிற்று. ஆட்கள் யாருமே இருந்ததாகத் தெரியவில்லை. இளவரசர் இருட்டிலேயே நுழைந்து மேலே சென்றார். வந்தியத்தேவன் பின்னால் திரும்பிக் குதிரைகளின் கதி என்னவென்று ஆவலுடன் பார்த்தான். இளவரசர், "குதிரைகளுக்கு வழி தெரியும்!" என்று வந்தியத்தேவனைக் கையைப் பிடித்து இழுத்துச் சென்றார். சற்றுத் தூரம் இருளிலேயே நடந்தார்கள். பிறகு 'மினுக் மினுக்' என்று வெளிச்சம் தெரிந்தது. பின்னர், பிரகாசமான ஒளி தென்பட்டது. அது ஒரு பழைய காலத்து அரண்மனையின் உட்புறம் என்று வந்தியத்தேவன் கண்டான்.

"இங்கே கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இருக்கவேண்டும். மகா சேன சக்கரவர்த்தியின் அந்தப்புரம் இது. திடீரென்று சக்கரவர்த்தி விஜயம் செய்து நம்மைத் துரத்தப் பார்த்தாலும் பார்ப்பார்!" என்றார் இளவரசர்.

"மகாசேனர் என்பவர் யார்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"மகாசேனர் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் இந்த இலங்கா ராஜ்யத்தை ஆண்ட சக்கரவர்த்தி. அவர் பொது ஜனங்களுக்குப் பல நன்மைகளைச் செய்தார். ஆகையால் அவருடைய ஆவி இந்த நகரத்தில் இன்னமும் உலாவிக் கொண்டிருப்பதாக ஜனங்கள் நினைக்கிறார்கள். அவருடைய ஆவியானது துணியில்லாமல் குளிரில் கஷ்டப்படப் போகிறதே என்று மரக்கிளைகளில் துணிகளைக் கட்டித் தொங்க விடுகிறார்கள்! இந்த அரண்மனையிலும் அவருக்குப் பிறகு யாரும் வசிப்பதில்லை. வெறுமனே தான் விட்டு வைத்திருக்கிறார்கள்!" என்றார் இளவரசர்.

இளவரசருக்கும் அவருடன் வந்தவர்களுக்கும் பணிவிடை செய்ய அங்கு ஏவலாளர் இருந்தார்கள். குளித்து உணவருந்திய பிறகு மூவரும் அந்த அரண்மனையின் உச்சி மாடத்துக்குச் சென்றார்கள். அவர்கள் இருந்த இடத்திலிருந்து சுற்றுப்புறமெங்கும் பார்க்கலாம். ஆனால் அவர்களைக் கீழேயுள்ளவர்கள் பார்க்க முடியாது. அப்படிப்பட்ட இடத்தில் போய் அமர்ந்தார்கள்.

"ஐயா! பன்னிரண்டு நாழிகைக்கு எங்கேயோ வரும்படி புத்தர் சிலை செய்தி சொன்னதாகக் கூறினீர்களே?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"இன்னும் நேரமிருக்கிறது. சந்திரன் இப்போது தானே உதயமாகியிருக்கிறான்? அதோ அந்தத் 'தாகபா' வின் உச்சிக்கு நேரே சந்திரன் வந்ததும் புறப்பட்டு விடுவோம்!" என்றார் இளவரசர்.

அவர் சுட்டிக் காட்டிய இடத்தில் ஒரு பெரிய குன்று போன்ற தாகபா ஸ்தூபம் நின்றது. புத்தர் பெருமானுடைய திருமேனியின் துகளை அடியில் வைத்து எழுப்பிய ஸ்தூபங்களாதலால் அவை 'தாது கர்ப்பம்' என்று அழைக்கப்பட்டன. தாது கர்ப்பம் என்னும் பெயர்தான் பின்னர் 'தாகபா' ஆயிற்று.

"எதற்காக இவ்வளவு பெரிய கட்டிடங்களைக் கட்டினார்கள்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"முதன் முதலில், புத்தர் எவ்வளவு பெரியவர் என்பதை ஜனங்களுக்கு உணர்த்துவதற்காக இவ்வளவு பெரிய சின்னங்களை நிர்மாணித்தார்கள். பின்னால் வந்த அரசர்களோ தாங்கள் எவ்வளவு பெரியவர்கள் என்பதைக் காட்டுவதற்காக, முன்னால் கட்டியிருந்த ஸ்தூபங்களைக் காட்டிலும் பெரிதாகக் கட்டினார்கள்!" என்றார் இளவரசர்.



சிறிது நேரத்துக்கெல்லாம் சமுத்திரத்தின் கொந்தளிப்பைப் போன்ற பேரிரைச்சல் ஒன்று கேட்டது. வந்தியத்தேவன் இரைச்சல் வந்த திக்கைத் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் ஒரு பெரிய சேனா சமுத்திரத்தைப் போன்ற பெருங்கூட்டம், — வீதிகளில் முடிவில்லாது நீண்டு போய்க் கொண்டிருந்த ஜனக்கூட்டம், — வருவது தெரிந்தது. அந்த ஜன சமுத்திரத்தின் நடுவே கரிய பெரிய திமிங்கலங்கள் போல் நூற்றுக் கணக்கில் யானைகள் காணப்பட்டன. கடல் நீரில் பிரதிபலிக்கும் விண்மீன்களைப் போல் ஆயிரம் ஆயிரம் தீவர்த்திகள் ஒளி வீசின. ஜனங்களோ லட்சக்கணக்கில் இருந்தார்கள்.

வந்தியத்தேவன் "இது என்ன? பகைவர்களின் படை எடுப்பைப் போல அல்லவா இருக்கிறது?" என்றான்.

"இல்லை, இல்லை! இதுதான் இந்த இலங்கை நாட்டிலேயே மிகப் பெரிய உற்சவமாகிய பெரஹரா த் திருவிழா!" என்றார் இளவரசர்.

ஊர்வலம் நெருங்கி வரவர வந்தியத்தேவனுடைய வியப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. அந்த மாதிரி காட்சியை அவன் தன் வாழ்நாளில் பார்த்ததில்லை. முதலில் சுமார் முப்பது யானைகள் அணிவகுத்து வந்தன. அவ்வளவும் தங்கமுக படாங்களினால் அலங்கரிக்கப்பட்ட யானைகள். அவற்றின் நடுநாயகமாக வந்த யானை எல்லாவற்றிலும் கம்பீரமாக இருந்ததுடன், அலங்காரத்திலும் சிறந்து விளங்கியது. அதன் முதுகில் நவரத்தினங்கள் இழைத்த தங்கப் பெட்டி ஒன்று இருந்தது. அதன்மேல் ஒரு தங்கக்குடை கவிந்திருந்தது. நடுநாயகமான இந்த யானையைச் சுற்றியிருந்த யானைகளின் மீது

புத்த பிக்ஷுக்கள் பலர் அமர்ந்து வெள்ளிப் பிடி போட்ட வெண்சாமரங்களை வீசிக் கொண்டிருந்தார்கள். யானைகளுக்கு இடையிடையே குத்து விளக்குகளையும் தீவர்த்திகளையும் இன்னும் பல வித வேலைப்பாடமைந்த தீபங்களையும் ஏந்திக் கொண்டு பலர் வந்தார்கள். கரிய

குன்றுகளையொத்த யானைகளின் தங்க முகபடாங்களும் மற்ற ஆபரணங்களும் புத்த பிக்ஷுக்களின் கைகளில் அசைந்த வெண்சாமரங்களும் பல தீபங்களின் ஒளியில் தகதகவென்று பிரகாசித்துக் கண்ணைப் பறித்தன.

யானைகளுக்குப் பின்னால் ஒரு பெரும் ஜனக் கூட்டம். அந்தக் கூட்டத்தின் மத்தியில் சுமார் நூறு பேர் விசித்திரமான உடைகளையும் ஆபரணங்களையும் தரித்து நடனமாடிக் கொண்டு வந்தார்கள். அவர்களில் பலர் உடுக்கை போன்ற வாத்தியங்களைத் தட்டிக் கொண்டு ஆடினார்கள். இன்னும் பல வகை வாத்தியங்களும் முழங்கின. அப்பப்பா! ஆட்டமாவது ஆட்டம்! கடம்பூர் அரண்மனையில் தேவராளனும் தேவராட்டியும் ஆடிய வெறியாட்டமெல்லாம் இதற்கு முன்னால் எங்கே நிற்கும்! சிற்சில சமயம் அந்த ஆட்டக்காரர்கள் விர்ரென்று வானில் எழும்பிச் சக்கராகாரமாக இரண்டு மூன்று தடவை சுழன்று விட்டுத் தரையில் வந்தார்கள். அப்படி அவர்கள் சுழன்றபோது அவர்கள் இடையில் குஞ்சம் குஞ்சமாகத் தொங்கிக் கொண்டிருந்த துணி மடிப்புக்கள் பூச்சக்கரக் குடைகளைப் போலச் சுழன்றன. இவ்விதம் நூறுபேர் சேர்ந்தாற்போல் எழும்பிச் சுழன்றுவிட்டுக் கீழே குதித்த காட்சியைக் காண்பதற்கு இரண்டு கண்கள் போதவில்லைதான்! இரண்டாயிரம் கண்களாவது குறைந்த பட்சம் வேண்டும்! ஆனால் அத்தகைய சமயங்களில் எழுந்த வாத்திய முழக்கங்களைக் கேட்பதற்கோ இரண்டாயிரம் செவிகள் போத மாட்டா! நிச்சயமாக இரண்டு லட்சம் காதுகளேனும் வேண்டும். அப்படியாக உடுக்கைகள், துந்துபிகள், மத்தளங்கள், செப்புத்தாளங்கள், பறைகள், கொம்புகள் எல்லாம் சேர்ந்து முழங்கிக் கேட்போர் காதுகள் செவிடுபடச் செய்தன.


ந்த ஆட்டக்காரர்களும் அவர்களைச் சுற்றி நின்ற கூட்டமும் நகர்ந்ததும் மற்றும் முப்பது யானைகள் முன் போலவே ஜாஜ்வல்யமான ஆபரணங்களுடன் வந்தன.

அவற்றில் நடுநாயகமான யானையின் மேலும் ஓர் அழகிய வேலைப்பாடு அமைந்த பெட்டி இருந்தது. அதன் மேல் தங்கக் குடை கவிந்திருந்தது. சுற்றி நின்ற யானை மீதிருந்தவர்கள் வெண் சாமரங்களை வீசினார்கள். இந்த யானைக் கூட்டத்துக்குப் பின்னாலும் ஆட்டக்காரர்கள் வந்தார்கள். இந்த ஆட்டக்காரர்களுக்கு நடுவில் ரதி, மன்மதன், முக்கண்ணையுடைய சிவபெருமான் வேடம் தரித்தவர்கள் நின்றார்கள். சுற்றிநின்றவர்கள் ஆடிக் குதித்தார்கள்.

"இதுஎன்ன? சிவபெருமான் இங்கு எப்படி வந்தார்?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"கஜபாகு என்னும் இலங்கை அரசன் சிவபெருமானை அழைத்து வந்தான். அதற்குப் பிறகு இங்கேயே அவர் பிடிவாதமாக இருக்கிறார்!" என்றார் இளவரசர்.

"ஓ வீர வைஷ்ணவரே! பார்த்தீரா! யார் பெரிய தெய்வம் என்று இப்போது தெரிந்ததா?" என்று வந்தியத்தேவன் கேட்டு மூடுவதற்குள் மற்றும் சில யானைகள் அதே மாதிரி அலங்காரங்களுடன் வந்துவிட்டன. அந்த யானைகளுக்குப் பின்னால் வந்த ஆட்டக்காரர்களுக்கு மத்தியில் கருடாழ்வாரைப் போல் மூக்கும் இறக்கைகளும் வைத்துக் கட்டிக் கொண்டிருந்த நடனக்காரர்கள் சுழன்றும், பறந்தும், குதித்தும், மூக்கை ஆட்டியும் ஆர்ப்பாட்டமாக ஆடினார்கள்.

"அப்பனே! பார்த்தாயா? இங்கே கருட வாகனத்தில் எங்கள் திருமாலும் எழுந்தருளியிருக்கிறார்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

மீண்டும் ஒரு யானைக் கூட்டம் வந்தது. அதற்குப் பின்னால் வந்த ஆட்டக்காரர்களோ கைகளில் வாள்களும் வேல்களும் ஏந்திப் பயங்கரமான யுத்த நடனம் செய்து கொண்டு வந்தார்கள். தாளத்துக்கும் ஆட்டத்துக்கும் இசைய அவர்கள் கையில் பிடித்த வாள்களும் வேல்களும் ஒன்றோடொன்று டணார் டணார் என்று மோதிச் சப்தித்தன.

இவ்வளவுக்கும் கடைசியாக வந்த யானைக் கூட்டத்துக்குப் பின்னால் ஆட்டக்காரர்கள் அவ்வளவு பேரும் இரண்டு கையிலும் சிலம்புகளை வைத்துக் கொண்டு ஆடினார்கள். அவர்கள் ஆடும்போது அந்தச் சிலம்புகளும் சேர்ந்து கலீர் கலீர் என்று சப்தித்தன. ஒரு சமயம் அவர்களுடைய நடனம் வெகு உக்கிரமாயிருந்தது. இன்னொரு சமயம் அமைதி பொருந்திய லலித நடனக் கலையாக மாறியது.

இந்தக் காட்சிகளையெல்லாம் கண்டும் பலவித சப்த சித்திரங்களைக் கேட்டும் பிரமித்து நின்ற வந்தியத்தேவனுக்கு இளவரசர் இந்த ஊர்வலத் திருவிழாவின் வரலாற்றையும் கருத்தையும் கூறினார்.


மிழகத்து அரசர்களும் இலங்கை அரசர்களும் நட்புரிமை பாராட்டிய காலங்களும் உண்டு. கடல் சூழ் இலங்கைக் கஜபாகு மன்னனும் சேரன் செங்குட்டுவனும் அவ்விதம் சிநேகமாயிருந்தார்கள். சேரன் செங்குட்டுவன் கண்ணகி என்னும் பத்தினித் தெய்வத்துக்கு விழா நடத்தியபோது கஜபாகு அங்கே சென்றிருந்தான். அந்நாட்டில் நடந்த மற்ற திருவிழாக்களையும் கண்டு களித்தான். பின்னர் ஒருசமயம் சேரன் செங்குட்டுவன் இலங்கைக்கு வந்திருந்த போது கஜபாகு மன்னன் விழா நடத்தினான். தமிழகத்தின் தெய்வங்களாகிய சிவபெருமான், திருமால், கார்த்திகேயர், பத்தினித் தெய்வம் ஆகிய நாலு தெய்வங்களுக்கும் ஒரே சமயத்தில் திருவிழா நடத்தினான். இந்த விழாக்களில் மக்கள் அடைந்த குதூகலத்தைக் கண்டு பின்னர் ஆண்டு தோறும் அந்த விழாக்களை நடத்தத் தீர்மானித்தான். புத்தர் பெருமானுக்கு அவ்விழாவில் முதல் இடம் கொடுத்து மற்ற நாலு தெய்வங்களையும் பின்னால் வரச் செய்து விழா நடத்தினான். அன்று முதல் அந்த விழா இலங்கையில் நிலைத்து நின்று மிகப் பெரிய திருவிழாவாக ஆண்டு தோறும் விடாமல் நடந்து வருகிறது.

"ஆனால் தெய்வங்களை எங்கும் காணவில்லையே?" என்றான் வல்லவரையன்.

"ஒவ்வொரு யானைக் கூட்டத்திலும் நடு நாயகமாக வந்த யானை மீது வைத்

திருந்த பெட்டியைப் பார்த்தீரா?''

"பார்த்தேன்! அந்தப் பெட்டிக்குள் தெய்வங்களைப் பூட்டி வைத்திருக்கிறார்களா? தப்பித்துக் கொண்டு தமிழகத்துக்குப் போய்விடக் கூடாது என்று?''

இதைக் கேட்ட பொன்னியின் செல்வர் நகைத்து விட்டு, "அப்படியில்லை; முதலில் வந்த யானை மீதிருந்த பெட்டிக்குள்ளே புத்த பெருமானுடைய பல் ஒன்றைப் பத்திரமாய்ப் பூட்டி வைத்திருக்கிறார்கள். புத்த சமயத்தார் இந் நாட்டில் போற்றிக் காப்பாற்றும் செல்வங்களுக்குள்ளே விலை மதிப்பற்ற செல்வம் அது. ஆகையால் அந்தப் புனிதப் பொருளை அழகிய பெட்டியில் வைத்து யானை மீது ஏற்றி ஊர்வலமாய் எடுத்துச் செல்கிறார்கள்!'' என்றார்.

"பின்னால் வரும் பெட்டிக்குள்ளே என்ன இருக்கிறது?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"சிவன், விஷ்ணு, முருகன், கண்ணகி ஆகியவர்களின் பற்கள் கிடைக்கவில்லை! ஆகையால் அவற்றுக்குப் பதிலாக அந்தந்தத் தேவாலயத்தின் தெய்வங்களுக்கு அணியும் திரு ஆபரணங்களை அந்தப் பெட்டிகளில் பத்திரமாய் வைத்துக் கொண்டு போகிறார்கள்'' என்று இளவரசர் கூறினார்.

வந்தியத்தேவன் சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, "ஆகா! தங்களுக்குப் பதிலாகப் பெரிய பழுவேட்டரையர் மட்டும் இங்கே படையெடுத்து வந்திருந்தால்?...'' என்றான்.

அச் சமயத்தில் திருவிழா ஊர்வலத்தின் கடைசிப் பகுதி அந்த வீதி முடுக்கில் திரும்பிச் சென்றது. வாத்திய முழக்கம், ஜனங்களின் ஆரவாரம்,—இவற்றின் ஓசை குறையத் தொடங்கியது.

"குறிப்பிட்ட நேரத்துக்கு இன்னும் ஒரு நாழிகைதான் மிச்சமிருக்கிறது. வாருங்கள்; போகலாம்!'' என்று இளவரசர் மேடையிலிருந்து இறங்கினார். மூவரும் கீழே வீதிக்கு வந்தார்கள். ஊர்வலம் சென்றதற்கு நேர் எதிர்ப் பக்கம் நோக்கி நடந்தார்கள். நகர மக்கள் அனைவரும் பெரஹாராத் திருவிழாவில் ஈடுபட்டிருந்தபடியால் இவர்கள் போன வீதிகளில் ஜன நடமாட்டமே இல்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு விஸ்தாரமான ஏரியின் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். அந்த ஏரியில் தண்ணீர் ததும்பிக் கரையில் அலைமோதிக் கொண்டிருந்தது. சந்திர கிரணங்கள் அந்த அலைகளில் தவழ்ந்து விளையாடி வெள்ளி அலைகளாகச் செய்து கொண்டிருந்தன.

ஏரிக் கரையிலிருந்து கீழே இறங்கிச் சென்றார்கள். அவ்விடத்தில் செண்பக மலர்களின் நறுமணம் பரவியிருந்தது. இன்னும் பல வகைப் புஷ்பச் செடிகளில் வெள்ளை மலர்கள் கொத்துக் கொத்தாகப் பூத்துத் திகழ்ந்தன. ஆங்காங்கே சிறிய சிறிய செய் குன்றுகளும் படித்துறைத் தடாகங்களும் காணப்பட்டன. தடாகம் ஒன்றின்மேலே அமைத்திருந்த அத்தகைய சிங்க முகத்துவாரத்திலிருந்து நீர் அருவி பொழிந்து கொண்டிருந்தது. அந்தத் தடாகக் கரை அருகில் நெருங்கிச் சென்று மூவரும் நின்றார்கள்.

அநுராதபுரத்துக்கு வெளியே சாலை ஓரத்தில் நின்ற புத்தர் சிலையின் தோற்றம் வந்தியத்தேவனுடைய மனக்கண் முன்னால் வந்தது. சிலையின் அடிப்பீடத்தில் வரிசையாக வைத்திருந்த தாமரை மொட்டுக்களை இளவரசர் எண்ணிப் பார்த்துப் பன்னிரண்டு என்று சொன்னார். அவை பன்னிரண்டு நாழிகையைக் குறித்தன போலும். தாமரை மலர்களாயிராமல் மொட்டுகளாயிருந்தபடியால் இரவைக் குறித்தன போலும். அந்த மொட்டுகளுக்கு அருகில் இருந்த சிங்க முகத்துக் கிண்டியும் வந்தியத்தேவனுடைய நினைவில் இருந்தது. அந்தப் பாத்திரம் இந்தச் சிங்க முக அருவி விழும் தடாகத்தைக் குறிப்பிட்டது போலும்!

இதெல்லாம் சரிதான்! ஆனால் இங்கு எதற்காக யார் இளவரசரை வரச் செய்திருக்கிறார்கள்? இதில் என்னென்ன அபாயங்கள் நேரிடுமோ என்னமோ தெரியவில்லையே? ஆயுதம் ஒன்றும் கொண்டு வரக்கூடாது என்று இளவரசர் தடுத்ததின் கருத்து



"எங்கப்பா ஒரு தீர்க்கதரிசிங்க!"

"எப்படிச் சொல்றீங்க?"

"என் சின்ன வயசிலே எப்பப் பார்த்தாலும் என்னைப் 'புறம்போக்கு'ன்னு திட்டுவாரு. அவரு சொன்ன மாதிரியே, புறம்போக்கு நிலத்தைப் பெரியவங்க ஆதரவோட பட்டா போட்டு விக்கறதுலதான் என் வாழ்க்கையே நடக்குது!"

— வி. ஜி. இளங்கோவன்.

என்ன? ஒருவேளை இங்கு ஏதேனும் காதல் நிகழ்ச்சி நடைபெறப் போகிறதோ?

இந்த நினைவு வந்ததும் வந்தியத் தேவனுடைய உள்ளம் கொந்தளித்தது. அவனுடைய மனம் கடல் கடந்து பழையாறைக்குப் பாய்ந்து சென்றது. இளையபிராட்டியும் வானதி தேவியும் அவன் மனக் கண்முன் வந்தார்கள்.

இளவரசரின் வாயைப் பிடுங்கிப் பார்க்கலாம் என்று வந்தியத் தேவன் எண்ணினான். "ஐயா! இந்த இடத்தைப் பார்த்தால் பழைய காலத்து அரண்மனை நந்தவனம் மாதிரி அல்லவா தோன்றுகிறது!" என்றான்.

"ஆம்; இது அரண்மனை நந்தவனம் இருந்த இடந்தான். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்த நந்தவனத்தையொட்டித் துஷ்டகமனுவின் அரண்மனை இருந்தது. அதோ பார்! இன்னமும் அந்த அரண்மனையின் சில பகுதிகள் அழியாமல் இருக்கின்றன!" என்றார்.

வந்தியத் தேவன் அங்கே சற்றுத் தூரத்தில் தெரிந்த பழைய அரண்மனை மாடங்களைப் பார்த்து விட்டு, "அந்தக் கட்டிடங்கள் அரண்மனை அந்தப்புரமாயிருந்திருக்கலாம். இந்தத் தடாகத்தில் அரசிளங்குமரிகள் இறங்கி ஜலக்ரீடை செய்து மகிழ்ந்திருப்பார்கள்!" என்றான்.

"இந்த நந்தவனத்திலே நடந்த அதிசயமான சம்பவம் வேறு ஒன்று உண்டு. ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் நடந்தது. துஷ்டகமனு மன்னனின் புதல்வன் 'ஸாலி' என்பவன் இங்கே ஒருநாள் உலாவிக் கொண்டிருந்தான். ஒரு பெண் இந்தத் தடாகத்தில் தண்ணீர் மொண்டு புஷ்பச் செடிகளுக்கு ஊற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான். அந்தப்பெண்ணிடம்காதல் கொண்டான். அவள் ஒரு சண்டாளப் பெண் என்றும், அவள் பெயர் அசோகமாலா என்றும் அறிந்தான். சண்டாளப் பெண்ணாயிருந்தாலும் அவளையே மணந்து கொள்வேன் என்று பிடிவாதம் பிடித்தான். 'அப்படியானால் நீ சிம்மாசனம் ஏற முடியாது!' என்று தந்தை கூறினார். 'சிம்மாசனம் வேண்டாம்; எனக்கு அசோக மாலாதான் வேண்டும்' என்று ஸாலிவாஹனன் பிடிவாதமாகக் கூறி விட்டான். இந்த உலகத்தில் இன்னொரு ராஜகுமாரனால் இப்படிக் கூற முடியும் என்று தோன்றுகிறதா?"

இவ்வாறு பொன்னியின் செல்வர் கூறிய போது, கோடிக் கரைக்கடலில் படகு செலுத்திய 'சமுத்திர குமாரி'யின் நினைவு வந்தியத் தேவனுக்கு வந்தது. ஆகா! ஒரு வேளை இவரும் அந்தப் பெண்ணை நினைத்துக் கொண்டுதான் இந்தக் கதையைச் சொல்லுகிறாரா, என்ன?

பூங்குழலியின் பேச்சை எப்படி எடுக்கலாம் என்று அவன் எண்ணிக் கொண்டிருந்தபோது, அங்கே ஓர் அதிசயம் நிகழ்ந்தது. சிங்கதாரைத் தடாகத்தின் பின்புறச் சுவரில், உட்பக்கம் குழிவாக அமைந்து, அதற்குள்ளே இருவர் அமரும்படியான ஒரு கல் ஆசனம் இருந்தது. அப்படி அமைந்திருந்த அறையின் ஓர் ஓரத்தில் திடீரென்று விளக்கு வெளிச்சம் காணப்பட்டது. விளக்கைப் பிடித்துக் கொண்டிருந்தவரின் கரம் முதலில் வெளிவந்தது. பிறகு புத்த பிக்ஷு ஒருவரின் திருமுகமும் காணப்பட்டது.

வந்தியத்தேவன் அந்த இந்திர ஜாலக் காட்சியை அடங்கா வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றான். மேலே என்ன நடக்கப் போகிறது என்று தெரிந்து கொள்ளும் ஆர்வத்தினால் அவன் மூச்சும் சிறிது நேரம் நின்றிருந்தது.

(தொடரும்)

"செபாஸ்டின்... வண்டியைப் பெரிய பாலத்துக்கு முன்னாடி நிறுத்து..."

"ஏற்கெனவே நாழியாயிடுச்சு. சீக்கிரமாப் போனாத்தான் கரும்பு லோடை ஆலையிலே எடைபோட்டு இறக்க வசதியா இருக்கும்... முடிஞ்சா இன்னும் இரண்டு லோடு அடிக்கலாம்..."

"அதை நான் பார்த்துக்கிறேன். வண்டியை நிறுத்துன்னா நிறுத்திட்டுப் போ. இன்னைக்கு அந்தப் பயலைக் கையும் களவுமாப் புடிச்சு, அவன் கை காலை ஒடிக்கலே நான் முத்து இல்லே...." — முறுக்காய் மேல் நோக்கித் திருகிவிடப்பட்டிருந்த மீசையை நீவி விட்டுக் கொண்டு, விழிகளை உருட்டிக் கறுவினான்.

"வேண்டாம் முத்து... அற்ப விவகாரம்... எதுக்கு வீண் வம்பு..."

"என்ன அப்படிச் சொல்லிட்டே... முதலாளி வீட்டுக் கரும்பை ஒரு வாண்டுப் பயல் ஒடிக்கறான்... அதைப் பார்த்துட்டுச் சும்மா இருந்தா அது எப்படி முதலாளிக்கு விசுவாசமாகும்... என் கண் முன்னாலே

# நன்றி!

அர. நாகராஜன்

பொடிப் பயல்... திருடிட்டு ஓடிட்டான்... அவனை விடறதா? இன்னைக்கு அவன் வரட்டும்... உண்டு இல்லேன்னு ஆக்கிடறேன்!"

"இன்னொரு நாளைக்குப் பார்த்துக்கலாம். வண்டியிலே டீசல் வேறே இல்லே. சும்மா நிறுத்தி நிறுத்தி ஓட்டினால் வேஸ்ட் ஆயிடும்... பெட்டவாய்த்தலை போனாதான் 'பங்க்'..."

"சும்மா புலம்பாதே... வண்டி நின்னாக் கூட எங்கேயாவது சைக்கிள்ல போய் டீசல் கொண்டாந்துடுவேன்... பெரிய பாலம் வந்திருச்சு... அட வண்டியை நிறுத்து... பய வர்றானான்னு டீயைக் குடிச்சிக்கிட்டே பார்க்கலாம்..."

ஃபர்ஸ்ட் கியரிலிருந்து, நியூட்ராலுக்கு வந்து, இன்ஜினை நிறுத்தினான் செபாஸ்டின்.

"இன்ஜினை ஆஃப் பண்ணிட்டியா?"

"ஆமாம்... எதுக்கு டீசல் வேஸ்ட் ஆகணும்..."

கீழே இறங்கினார்கள். சாலை ஓரத்தில்



மரப்பலகையில் அன்னம் தேநீர் விடுதி' என்று சாக்பீஸால் எழுதி இருந்த கீற்றுக் கொட்டகையில், சமுசாவுக்கும், டீக்கும் ஆர்டர் கொடுத்துவிட்டுக் காத்திருந்தார்கள்.

''அதோ கண்டெலி...''

''கண்டெலியா...?''

''ஆமாம்'' செபாஸ்டின் முதன் முறையாகச் சிரித்தான். ''லாரியிலே கரும்புப் பொறி வைச்சிக்கிட்டுக் காத்துக்கிட்டிருக்கியே. அதுக்குச் சொன்னேன். பய வந்துட்டான்...''

''எங்கே...? எங்கே...?''

முத்துவின் முரட்டுக் கரங்கள் படபடத்தன. விழிகள் ஆவேசமாய் இரையைத் தேடும் கழுகின் விழிகளைப் போல் உற்று நோக்கின.

லாரியின் மறுபக்கம். சக்கரத்தின் மீது கால்களை வைத்துக் கொண்டு, ஒரு கையால் பக்கவாட்டுப் பலகையைப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையால் கைக்குக் கிடைத்த கரும்பை உருவி உடைக்க முயற்சி செய்து கொண்டிருந்தான் அந்தச் சிறுவன்.

''போனால் போறான் விடு... அரைத் துண்டுக் கரும்பு... நீ முதல்ல டீயைக் குடி...''

''அவனை விடறதா? இதுக்கா வண்டியை நிறுத்தச் சொன்னேன்?'' முத்து குடித்துக் கொண்டிருந்த டீயை அப்படியே வைத்துவிட்டு, மெல்ல லாரியின் பின்புறமாக அவனுக்குத் தெரியாமல் பலகையை ஒட்டி ஊர்ந்து... லாகவமாகப் பையனின் சட்டையைப் பற்றிக் கொண்டான். ''திருட்டு ராஸ்கல்... கரும்பா திருடறே!'' எத்தனை நாள் கோபமோ... யார் மீது இருந்த வெறியோ...? முத்துவின் முரட்டுப்புரட்டல்களுக்குச் சிறுவனால் ஈடுகொடுக்க முடியாமல் அலறினான்.

''ஐயோ அடிக்காதீங்க... இனிமேல் திருட மாட்டேன்... சத்தியமாத் திருட மாட்டேன்...''

கன்னக் கதுப்புகள் கன்னி, வீங்கி இருந்தன. நெற்றியில் லேசான காயம்... கைகால்களில் சிராய்ப்பு. ஏற்கெனவே கிழிந்திருந்த சட்டை, இப்போது வெறும் நார் நாராகப் போய்விட்டிருந்தது. செம்பட்டைத் தலைமுடி கலைந்து, அவன் தோற்றமே உருமாறி இருந்தது.

''போதும் முத்து. வா போகலாம்...'' — முத்துவை இழுத்துக் கொண்டு, செபாஸ்டின் வண்டியில் ஏறினான். அவன் மனசுக்குச் சங்கடமாக இருந்தது.

''நீ அவனை இப்படி முரட்டுத்தனமா அடிச்சிருக்க வேணும்... ஏதாவது ஒண்ணு ஆச்சன்னா என்ன ஆகிறது? சும்மா மிரட்டி விட்டிருக்கலாம். ஏதோ ஆசைப்பட்டு அரைத் துண்டு கரும்பை ஒடிச்சிட்டான்... அதுக்காக இப்படியா?''

''அதுதான் விசுவாசம்... இதைக் கேள்விப்பட்டா முதலாளி எவ்வளவு சந்தோஷப்படுவாரு தெரியுமா...? அட, நீ ஒண்ணு. இந்தப் பய பண்றது திருட்டுத்தனம் இல்லையா... இப்படி ஆரம்பிக்கிறதுதான் கொலை, கொள்ளைன்னு போய் முடியும். கரும்பு லோடை ஆலையிலே பத்திரமா கொண்டு போய்ச் சேர்க்க வேண்டியது என் பொறுப்பு. ஆலையிலே எடை போடறப்ப எடை குறைஞ்சா நான்தான் பதில் சொல்லணும். முதலாளிக்கு விசுவாசமா நடந்துக்கறேன்... இதிலே என்ன தப்பு?''



தன் பங்கு நியாயத்தை விலாவாரியாக விளக்க ஆரம்பித்து விட்டான் முத்து. செபாஸ்டின் மௌனமானான்.

''என் மேலே கோபமா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே...''

''பீடி இருந்தால் குடேன்...''

காது இடுக்கில் பத்திரப்படுத்தி வைத்திருந்த பீடியை எடுத்து நீட்டினான், செபாஸ்டின்.

ஆனந்தமாய் முத்து 'தம்' பிடிக்க, பாதை ஓரத்தில் கைகாட்டுவது யார்?

''போலீஸ்!''

போலீஸ்காரரின் சைகைக்குப் பணிந்து, செபாஸ்டின் வண்டியை நிறுத்தினான்.

''வண்டி எங்கே போகுது?''

''பெட்டவாய்த்தலை சர்க்கரை ஆலைக்கு...''

''உள்ளாற ஒண்ணும் கடத்திட்டுப் போகலியே...?''

''வேணும்னா நீங்களே பார்த்துக்குங்க...''

''ஓவர் லோடு போலிருக்கு...''

''வழக்கமா ஏத்தறதுதான்...''

''அப்படின்னா வழக்கமா ஓவர் லோடு ஏத்திக்கிட்டுத்தான் போவீங்கன்னு சொல்லுங்க...'' — போலீஸ்காரர் கிண்டலாகக் கேட்டார்.

''நல்லா விளைஞ்ச கரும்பு...''

''ஆமாம் சார்... சாப்பிட்டுப் பாருங்க... தேனாட்டம் இனிக்கும்...''

முத்து அவர் கேட்காமலேயே கரும்பு ஒன்றை உருவி, அழகாக நறுக்கிக் கொடுத்தான்.

''எனக்குப் பல் எங்கே இருக்கு? வீட்டுலேன்னா குழந்தைங்க சாப்பிடும்...''

முத்து கரும்புக்கட்டு ஒன்றை உருவி, அவர் சைக்கிளில் அழகாகக் கட்டிக் கொடுத்து, அவரை அனுப்பி வைத்தான்.

வண்டியின் ஆக்ஸிலேட்டரை மிதித்தபடி செபாஸ்டின் கேட்டான். ''ஒரு துண்டு கரும்பு ஒடிச்சதுக்காக அந்தப் பயலை அடிச்சே... இப்போ போலீஸ்காரருக்கு ஒரு 'கட்டு' இனாமாக் கொடுக்கறே... இதுதான் முதலாளி விசுவாசமா...? முதலாளி கோபிச்சுக்க மாட்டார்...?''



''மாட்டார்!''

''ஏன்...?''

''ஓவர் லோடுன்னு கேஸ் எழுதி அபராதம் நூறு இருநூறுன்னு கட்டறதை விட, ஒரு கட்டுக் கரும்போட பிரச்னையைச் சமாளிச்சுட்டதுக்குச் சந்தோஷப்படுவார்.''

''ஹூம்...''

''செபாஸ்டின், வண்டியை ராஜேந்திரம் கோயிலுக்கு முன் அஞ்சு நிமிஷம் நிறுத்து...''






மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்
நியூட்ரின்
மில்க் பிஸ்கட்ஸ்




ACIL/009/86-Tam

# தளபதி திடமதி

## பரிசு ரூ. 400!



அரசியல், சமுதாயப் பிரச்னைகள் அல்லது நிகழ்ச்சிகள் எதுவானாலும் அது குறித்துத் தமது அறிவுக் கொழுந்தான கருத்தை வெளியிடாமல் இருக்க மாட்டார் தளபதி திடமதி. என்ன சொல்வார் என்பதைத்தான் நீங்கள் யூகித்துக் கீழே உள்ள கூப்பனில் எழுதி அனுப்ப வேண்டும். பிரசுரமாகும் துணுக்கு ஒவ்வொன்றும் ரூ. 25 பரிசு பெறும். ஒருவரே எழுதிய துணுக்குகள் சில அடுத்த பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் பரிசுத் தொகை இரட்டிப்பாகும். அதிகபட்சமாக ஒரு துணுக்குக்கு ரூ. 400 பரிசு பெற வாய்ப்புண்டு. உறை மீது "தளபதி திடமதி" என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி 6.12.87 இதழ் — முடிவு தேதி: 15.12.87.

தளபதி திடமதி:"..................

..................

..................

..................

..................

..................

..................

..................

..................

என் பெயர்:..................



விலாசம்:..................

..................

"உன்னோட ஒரே ரோதனை... எதுக்கு?"

"அட... கோவிச்சுக்கிறியே... நீ புதுசு இல்லையா...? அதுதான் அய்யாவைப் பத்தித் தெரியலே... அங்கே என்னோட குயில் ஒண்ணு காத்துக்கிட்டு இருக்கும்..."

"குயிலா...?"

"ஆமாம்... அதுதான் நம்ப செட்-அப்."

"இது வேறே இருக்கா?"

"சரிதான்... கொஞ்சம் 'அட்ஜஸ்ட்' பண்ணிக்க..."

வெண்டா வெறுப்பாக முகத்தைச் சுளித்தான் செபாஸ்டின். வண்டியில் லோடை ஏற்றினோம், ஆலையில் கொண்டு போய் இறக்கினோம் என்று இல்லாமல், என்ன இது?

சொல்லி வைத்தாற்போல், ராஜேந்திரம் ரோடு திருப்பத்தில் கையசைத்தாள் அவள்...

"என்ன முத்து... பத்து மணிக்கு வரேன்னு சொன்னே... மணி பதினொண்ணு ஆவுது... ஒரு மணி நேரம் லேட்...?"

"சரிதான் உடு... டிரைவர் புதுசு... என்ன அப்படிப் பார்க்கிறே... இந்தா இந்தப் பணத்தைப் புடி... ராவுக்குக் கோழிக் குருமா.. தேங்காய் சாதம் பண்ணி வை. சரியா ஆறு மணிக்கு வந்துடுவேன்... சூடா இருக்கணும்..."

"நான் சூடாத்தான் இருக்கேன்..." — அவள் முத்துப்பல் தெரியச் சிரித்தாள்: கிராமத்து மினுமினுப்பும், தளதளப்பும் இயற்கையிலே பெற்றிருந்தவள், செயற்கையான பவுடர் ஸ்னோ பூச்சில் விநோதமாகப் பளபளத்தாள்.

"ஏன்... இப்பத்தான் வாயேன்... கருவாட்டுக் குழம்பு இருக்கு... பொரிச்ச அப்பளம் இருக்கு... டிரைவர் சார், நீங்களும் வாங்களேன்..."

செபாஸ்டின் முகத்தைத்திருப்பிக்கொண்டான். படம் விரித்து ஆடுகின்ற நாகப் பாம்புகூட அழகாக இருக்கிறது. அதற்காக அதனுடன் உறவு வைத்துக் கொள்வதா!

"இப்போ நேரமாச்சு... சாய்ந்தரம் கட்டாயம் வாரேன்..."

"டிரைவர் சார்... நீங்களும் வாங்க... நான் ஒண்ணும் குறைஞ்சிட மாட்டேன்..." — கண்சிமிட்டிச் சிரித்தாள் அவள்.

செபாஸ்டின் "ஜீசஸ்... ஜீசஸ்..." — என்று முணுமுணுத்தான்.

"நீ தேற மாட்டே!" — முத்து கிண்டலாகச் சிரித்தான். "சரி, வண்டியை எடு.."

செபாஸ்டின் வண்டியைக் கிளப்ப, முத்து கரும்புக் கட்டு ஒன்றை நைசாக அவிழ்த்து அவள் பக்கமாகத் தள்ளிவிட்டான்.

"கரும்பு கீழே விழுது பார்..."

"ராஜாத்தி எடுத்துக்கிட்டுப் போயிடுவா..."

"எடை போட்டாக் குறையாது?"

"அதை நான் பார்த்துக்கறேன்..." — அசடு வழியச் சிரிக்கும் முத்துவைப் பார்க்க அருவருப்பாக இருந்தது செபாஸ்டினுக்கு.

# நிற்க நிழல் வேண்டும்

வாஸந்தி

## 19

"சீலன் அண்ணா! சீலன் அண்ணா!" கையிலிருந்த பத்திரிகையை மடித்து வைத்து ஜயசீலன் நிமிர்ந்தான்.

பள்ளிக்கூடப் பையைத் தோளில் மாட்டிக் கொண்டு ஜோஸப் நின்றிருந்தான். வெயிலில் நடந்து வந்திருந்த களைப்பு மேலுதட்டிலும் நெற்றியிலும் முத்து முத்தாய் நின்றது.

"என்ன?"

"என்ன விஷயம் எண்டு எனக்குத் தெரியாது. அந்த மகேசுவரிக்கு உங்களைப் பார்க்கணுமாம்!"

அவன் முகத்தில் தெரிந்த எரிச்சலைக் கண்டு ஜயசீலனுக்குச் சிரிப்பு வந்தது.

"பார்க்கணுமெண்டா இங்கே வரட்டுமே!"

"வரமாட்டா. அத்தைக்கு அவளைக் கண்டா பிடிக்காது."

"அது ஏன்?"

"அத்தையைத்தான் கேக்கணும்" என்று அவன் சிரித்தான். "வீட்டுக்கு வரணுமாம். அவ அப்பாவும் அம்மாவும் ராமேசுவரம் போயிருக்கார்களோ என்னவோ?"

ஜயசீலன் எழுந்து அவன் காதைத் திருகினான்.

"நீ உளவு வேலைக்குச் சரியான ஆள்."

அவன் செருப்பை மாட்டிக் கொள்ளும் போது ஜோஸப் தயங்கிக் கொண்டு நின்றான்.

"அக்காவைப் பற்றித் தகவல் இங்கே ஒண்ணும் கிடைக்க இல்லேதானே?"

ஜயசீலன் அவனுடைய தோளை அழுத்திப் பிடித்து, "இல்லே" என்றான் மெல்லிய குரலில்.

'எனக்கு நம்பிக்கை போய்விட்டது' என்று சொல்ல நினைத்து, சொல்லாமல் அவன் தெருவில் இறங்கி நடந்தான்.

புனிதா சொன்ன செய்தியிலிருந்து சீலியாவின் பெயர் இங்கு ரெஜிஸ்தர்களில் நிச்சயம் இருக்காது என்று புரிந்து போயிற்று.

அன்று இரவு முழுவதும் சுகுமாரனைப் பற்றிய ஆத்திரம் நெஞ்சில் கனன்று கொண்டிருந்தது. புனிதா சொன்னதில் உண்மை இருக்குமானால் சீலியாவுக்கு என்ன ஆகியிருக்கும் என்று கற்பனை செய்து பார்க்கக் கூட அவனுக்குத் திராணி இல்லாமல் போயிற்று. தப்பியிருக்க முடியாது என்ற நிராசை திரும்பத் திரும்பத் தோன்றினாலும், அவள் உயிர் பிழைத்திருக்கலாம் என்கிற மயிரிழை நம்பிக்கை நெஞ்சின் ஓர் ஓரத்தில் அமுக்க அமுக்கத் துளிர்விட்டுக் கொண்டிருந்தது. அவள் உயிர் பிழைத்திருந்தால் போதும் அவனுக்கு. அவளது உடலுக்கு எத்தகைய அவமானம் ஏற்பட்டிருந்தாலும் அதற்கு அவளோ அவனோ பொறுப்பில்லை.

காதல் என்றும் திருமணம் என்றும் மனம் திசை திரும்பிவிடக் கூடாது என்று உபதேசித்த சுகுமாரன் உபயோகித்துக் கொண்ட பெண்கள் எத்தனை பேர்! அவனே பெருமையடித்துக் கொள்வான் — 'சிங்கள ராணுவம் நம்ம பெண்களைக் கற்பழிச்சதை விட நம்ம கூட்டங்கள் அழிச்சது அதிகம்' என்று!

புனிதா சொன்ன விஷயம் சீலியாவின் பெற்றோர்களுக்குத் தெரியாமல் இருந்திருக்குமா என்று அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவனிடம் சொன்னால் ஆபத்து என்று நினைத்திருப்பார்களோ? அதனால்தான் அவளைக் கட்டாயப்படுத்தி இந்தியாவுக்கு அனுப்பினார்களா? யோசிக்க யோசிக்க அவனுக்குக் குழப்பம் அதிகரித்தது. புனிதா சொன்ன செய்தியும் உண்மையானதா என்று தெரியவில்லை. 'யாரோ சொன்னார்கள்' என்றாளே தவிர, மேற்கொண்டு எதுவும் திட்டமாக அவளுக்குச் சொல்ல முடியவில்லை. அன்றெல்லாம் அவன் பட்ட துயரத்தைக் கண்டு, அவனருகில் அமர்ந்து, "அந்தச் செய்தி தவறாயிருக்கலாம் சீலன்!" என்றாள். "இப்ப அந்தச் சுகுமாரனைத் துரத்திக்கிட்டுப் போறதனாலே உமக்கு ஒரு லாபமுமில்லே. சீலியாவுக்கு என்ன ஆச்சுன்னு அவன் வாயைத் திறந்து சொல்ல மாட்டான். உம்ம உசிருக்கும் ஆபத்து."

"நான் எதுக்கு உயிர் பிழைச்சிருக்கணும் புனிதா? என்னவோ குருட்டு அதிர்ஷ்டத்திலே தப்பினேன். விதி மறந்து போனதை நாலே செய்துக்க வேண்டியதுதான். நான் மட்டும் இப்படித் தனியா நிக்கிறது கேலிக் கூத்து போல இருக்கு."

"சீச்சி, இப்படியெல்லாம் நீ பேசக் கூடாது. சீலியா உயிரோடு இல்லேன்னு நிச்சயமாத் தெரியாத நிலையிலே நீ இப்படி கதைக்கிறது 'அசட்டுத்தனம். புனிதா, சிலவேளைக் கண்டியான்னு ஒரு நாள் அவ வந்து நின்னா நான் என்ன சொல்லட்டும்?"

அவன் இதை நினைத்து நினைத்து அயாசப் பெருமூச்சு விட்டான். அவன் மனசு அவனை ஏமாற்றுவது போதாது என்று சுற்றிலுமுள்ளவர்கள் காட்டும் ஆசை வேறு! இந்த மயிரிழை ஆசையை வைத்துக் கொண்டே இங்கு உயிருக்குப் பாதுகாப்பும் நிம்மதியும் இருந்தாலும் முள்ளின் மேல் நிற்பது போல் இருந்தது. எப்படிப்பட்ட அவல நிலை இது சொந்த மண்ணில் நிற்க நிழலில்லாமல்!

"வாருங்கோ ஜயசீலன்!" அவன் திடுக்கிட்டுச் சுயநினைவுக்கு வந்து நிமிர்ந்தான். அவனையுமறியாமல் மகேச்வரியின் வீட்டு வாசலுக்கு வந்திருந்தான்.

மகேச்வரியின் முகத்தில் உற்சாகமா உல்லாசமா என்று புரியாத ஒரு கலவை இருந்தது.

"எங்கே கண்ணை மூடிக் கொண்டு போறீர்?" என்று அவள் சிரித்தாள். ஜோஸப் சொன்னது போல் வீட்டில் யாரும் இல்லை என்று தோன்றிற்று.

அவன் திண்ணையில் உட்காருகையில் "உள்ளே வாருங்கோ. உங்ககிட்டே ஒரு விஷயம் சொல்லணும்" என்றாள்.

"மாமாவும் மாமியும் இல்லே?"

"இல்லே. கோவிலுக்குப் போயிருக்கார்கள். அதனாலேதான் கூப்பிட்டனுப்பினேன்." அவன் உஷாரானான்.

"அப்ப்டியென்ன ரகசியம்?"

"ரகசியம்தான். வாருங்கோ!"

அவன் இன்னும் தயங்குவதைக் கண்டு அவள் அவன் கரத்தைப் பற்றி இழுத்தாள்.

"உங்களுக்குச் சீலியா என்டு ஒரு சினேகிதி இருந்தது உண்மையா?"

அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"யார் சொன்னது உனக்கு?"

"நீங்க உள்ளே வரல்லேண்டா நான் எப்படிக் கதைக்கிறது?"

அவன் சட்டென்று உள்ளே சென்றான். "யார் சொன்னது உனக்கு?" என்று மீண்டும் படபடத்தான்.

"நீங்க எங்கப்பாகிட்டே சொல்ல மாட்டீர்தானே?"

"சரி, சொல்ல மாட்டேன்."

"கையை நீட்டுங்கோ!"

என்று அடித்துச் சத்தியம்வாங்கிக்கொண்டாள்.

"எனக்கு ஒரு சினேகிதன். அவன் யாருண்டெல்லாம் கேட்கக் கூடாது. அவன் சொன்னான்."

"என்ன சொன்னான்?"

"உங்களட சீலியாவைப் பத்தி!"

"என்னைப் பத்திப் பேச்சு எப்படி வந்தது?"

"ஒரு நாள் இந்த வழியா நீங்க போகும்போது பார்த்தான்."

"யார் அவன்?"

"இதெல்லாம் கேட்கக் கூடாதுன்னு நான் சொன்னேனே!"

"இந்த முகாம்லே இருக்கிறவனா?"

"நான் எதுவும் சொல்லப் போறதில்லே."

"சரி, நா கேட்க இல்லே. என்ன சொன்னான்?"

"உங்களைப் பார்த்ததும், 'அட ஜயசீலனா இங்கே எங்கே வந்தான்?' ன்னான். 'அவரை உமக்குத் தெரியுமா' ன்னேன். 'தெரியும், இவனோடு சீலியான்னு ஒரு பொண்ணும் இருக்காளா?' ன்னான். 'இல்லையே, அவளைத்



தேடிக்கிட்டுத்தான் அந்த ஆள் இங்கே வந்திருக்காரு'ன்னேன்.''

''உனக்கெப்படி இது தெரியும்?'' என்றான் ஜயசீலன் திடுக்கிட்டு. ''புனிதா சொன்னாளா?''

''சீ, இல்லைண்டா எனக்கு விஷயம் தெரிய வராதா? என் சாமர்த்தியத்தைப் பத்தி உமக்குத் தெரியாது!''

''சரி, விஷயத்துக்கு வா!''

''வேடிக்கைதானான். சீலியாவைத் தேடிக்கிட்டு இங்கே வந்திருக்கானு'ன்னான். அவ எங்கே தெரியுமா'ன்னேன். இலங்கையிலேதான் இருக்கணும். இவனுடைய விரோதி அவளைக் கடத்திக்கிட்டுப் போனான். அவ கன சாமர்த்தியமா தப்பி ஓடிட்டா'ன்னான்.''

ஜயசீலன் அவன் தோள்களை வெறி கொண்டவன் போல் பிடித்துக் குலுக்கினான்.

''என்ன சொன்னான்? திருப்பிச் சொல்லு!''



''அவ தப்பி ஓடிட்டாளாம்!''

''அப்ப சீலியா உயிரோட இருக்கா...!''

அவனுடைய கண்களின் திமிர் பளபளப்பையும் புன்னகையில் விரிந்த அதரங்களையும் அவள் அதிசயத்துடன் பார்த்தாள்.

''இருக்கணும்!''

''இலங்கையிலேயே?''

''அப்படித்தான் அவன் சொன்னான்!''

அவள் சற்றும் எதிர்பாராமல் அவன் அவளது தோளைப் பற்றித் தூக்கி ஒரு தட்டாமாலை சுற்றினான்.

அவள் முகத்தில் ஒரு நூதன பாவம் தோன்றிற்று.

''இலங்கைன்னு எங்கேன்னு நீங்க தேட முடியும்? மறுபடியும் எப்படிப் போறது?''

அவன் மெல்ல யதார்த்தத்துக்குத் திரும்பினான்.

''அவ உயிர் தப்பி ஓடிட்டா என்கிற விஷயம் எனக்குப் போதும்'' என்றான் நிதானமாக. ''என்னைக்காவது ஒரு நாள் இலங்கைக்குத் திரும்பாம இருக்கப் போறதில்லே. அப்ப மூலை முடுக்கு விடாம தேடுவேன்.''

''தப்பிச்ச பிறகு ராணுவத்துக்கிட்டே அகப்பட்டிருந்தான்னு?''

அவன் தலையைக் குனிந்து கொண்டான். அதுவும் சாத்தியம்தான்.

''கடத்தினவனுக்கு அவள் பலியாக இல்லே என்கிறது பெரிய விஷயம். உன்னுடைய சிநேகிதன் யார் எண்டு கதைக்க மாட்டியா?''

''ஊஹூம் அது இயலாது.''

அவன் சற்று நேரம் யோசனையில் நின்றான். திடீரென்று இவள் மேல் ஒரு பரிவு ஏற்பட்டது. செயலின் விபரீதத்தை உணராமல் இவள் எவ்வளவு பெரிய ஆபத்தான விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறாள் என்று துயரமேற்பட்டது.

அவன் அவள் தோளில் கையை வைத்தான். ''இதப் பார் மகேச்வரி. நான் என்னவோ உன்னைப் பற்றிக் கேள்விப்படறேன். மனசுக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்குக் கேட்க,'' என்றான் மெல்லிய குரலில்.

அவள் கண் சொடுக்காமல் மிடுக்குடன் சொன்னாள்.

''சனங்க என்ன வேணும்னாலும் கதைப்பாங்க. அவங்களுக்கு என்ன வேலை?''

''ஆதாரமில்லாம கதைக்க மாட்டாங்க. இந்த வேலை உனக்கு வேண்டாம். ஆபத்து மட்டுமில்லே. தவறான காரியம். இங்கே எவ்வளவோ தொழிலுக்குப் பயிற்சி கொடுக்கிறாங்க. போய்க் கத்துக்கோ. எங்கேயிருந்தாலும் கௌரவமாய்ப் பிழைச்சுக்கலாம்.''

''அதெல்லாம் என்னை மட்டும்தான் பிழைக்க வைக்கும். என் நாட்டுக்கு விடுதலை கிடைக்காது!''

''எனக்கு விளங்க இல்லே!''

அவள் ஆவேசம் வந்தவளைப் போல அவனைப் பார்த்துத் தீர்க்கமாகச் சொன்னாள்.

''நம்ம நாட்டு விடுதலைக்காக ஆயுதமேந்திப் போராடற வீரர்களுக்குப் பணம் தேவை. நம்ம நோக்கம்தான் முக்கியமே தவிர பணம் எப்படி வருது எண்டு முக்கியமில்லே. என் உடம்பை வித்துக் கூட நா அவங்களுக்குப் பணம் அனுப்பத் தயங்க மாட்டேன். ஜயசீலன் நீங்க ஒரு பேடி. உங்களைப் போல இருக்கறவங்களைப் பார்க்க எனக்கு வெறுப்புத்தான் வருது!''

முகம் பளபளக்கப் பேசும் அவளை அவன் சோகத்துடன் பார்த்தான். போதை வஸ்துவைவிட இவளை ஆட்கொண்டிருக்கும் போதை வீர்யம் கொண்டது என்று தோன்றிற்று.

''போரிலே புறமுதுகு காட்டி ஒரு பெண்ணுக்காக ஓடிவந்த பேடி''

அவன் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு கிளம்ப ஆயத்தமானான்.

''மகேச்வரி, உன்னை விட நான் பெரியவன் என்கிறதை மறந்திடாதே!''

''இந்தப் போராட்டத்திலே நோக்கமும்

செயலும்தான் முக்கியம்; வயசில்லே!'' என்றாள் அவள் ஆணவத்துடன்.

அவன் சோர்வுடன் வெளியே வந்தான். அவள் அவனைக் கூப்பிட்டுச் சொன்ன செய்தி தந்த சந்தோஷம் கூடக் கடைசியில் வடிந்து போய்விட்டது போல் இருந்தது.

கால் போன போக்கில் அவன் நடந்தான். சீலியாவின் அப்பா பேச்சைக் கேட்டுக் கொண்டு இங்கு வந்தது பைத்தியக்காரத்தனம் என்று தோன்றிற்று. இப்பொழுது மீண்டும் இலங்கைக்கு எப்படிப் போவது? இந்தத் தகவலைச் சொன்ன மகேச்வரியின் நண்பன் நிச்சயம் அவன் இருந்த இயக்கத்தைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும். இவன் இங்கு இருப்பதைச் சுகுமாரனுக்குத் தெரிவிக்காமல் இருக்க மாட்டான். சீலியா தப்பித்துக் கொண்டு போனாள் என்கிற அவமானத்தையும் ஜயசீலன் மேல் இருக்கும் வைராக்கியத்தையும் சுகுமாரன் மறப்பானா?

நோக்கம்தான் முக்கியம் என்கிறாள் மகேச்வரி. நோக்கமே திசை திரும்பிவிட்டது என்றால் அவள் புரிந்து கொள்வாளா?

''என்னய்யா ஜயசீலன், எங்கே ஆகாசத்தைப் பார்த்துக்கிட்டு நடக்கறே?'' என்ற குரல் கேட்டு அவன் திரும்பினான். ரெஜிஸ்தர் ஆபீஸ் குமாஸ்தா வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்.

''என்னய்யா செய்ய? நிலத்திலே ஒண்டும் காண இல்லையே!''

''சோர்ந்து போயிடாதே. இன்னி நியூஸ் தெரியுமா? இந்தியாவுக்கும் இலங்கைக்கும் உங்க பிரச்னைக்குத் தீர்வு காண ஒரு உடன்படிக்கை வரப்போறது. இனிமே உங்களுக்கு விமோசனம்தான். நீங்கள்லாம் இங்கேயிருந்து திரும்ப இலங்கைக்குப் போயிடுவீங்க!''

அவனுடைய கண்களும் மார்பும் விரிந்தன. நம்புவது கஷ்டமாக இருந்தது. இது வரை சந்தித்திருக்கும் ஏமாற்றங்கள் போல் மறுபடியும் ஏமாற்றம் வருமோ என்று கூடவே ஐயம் எழுந்தது.

பிரபு, மல்ஹோத்திரா சொன்ன செய்தியைக் கேட்டு கலவரப்படையாமல் கம்பீரமாக நின்றான்.

''நாளைக்கு பிரைம் மினிஸ்டர் பார்ட்டியோட நீ கொலம்போ கிளம்பத் தயாராகணும் பிரபு!''

''நோ பிராப்ளம்!'' என்று அவன் சிரித்தான்.

''அவரோடயே நீ திரும்பி வந்துடக் கூடாது'' என்றார் மல்ஹோத்திரா. ''அத்தனை லகுவாக நிறைவேறப் போகிற விஷயமில்லே இது. இலங்கையிலே கொஞ்ச காலம் நீ தங்க வேண்டி வரும். கொலம்போவிலே உனக்கு இரண்டு மூணு மாசத்துக்காவது போஸ்டிங் இருக்கும்.''

''நோ பிராப்ளம்'' என்றான் அவன் மீண்டும் உற்சாகத்துடன்.

(தொடரும்)

பக்திப் புத்தகம்

பத்திரிகைகள்

# இலவசம்

நவம்பர், டிசம்பர் மாதங்களில் எங்களுடைய இனிப்பு, காரம் வகைகளை வாங்குகின்றவர்களுக்கு பக்தி நூல்கள், பக்தி மாதாந்திர பத்திரிகைகள் வாங்கும் துகைக்கு அனுசரித்து இலவசமாக கொடுக்கப்படும்.

**இனிப்பு வகைகள்:**

1. மங்களூர் போளி
2. தேங்காய் போளி
3. ரஸ மலாய்
4. ஸோன் பப்டி கேக்
5. மாலாடு ரவாலாடு
6. இனிப்பு ஸோமாஸ்
7. முந்திரி கத்லி
8. கடலை உருண்டை
9. பொரிவிளங்காய் உருண்டை
10. தேங்காய் கோவா
11. அதிரசம்
12. வெல்ல சீடை
13. சூரத்காரி
14. கோதுமை ஹல்வா
15. ரஸகுல்லா
16. குங்குமபூ லட்டு
17. குங்குமபூ புரதம் ஹல்வா
18. குங்குமபூ வீட் ஹல்வா
19. புருட் ஹல்வா
20. சூரியகலா

**கார வகைகள்:**

1. தட்டை
2. தேன்குழல்
3. கைமுறுக்கு
4. சீடை
5. ஸ்பெஷல் மிக்ஸர்
6. நவரத்ன மிக்ஸர்
7. உருளைக்கிழங்கு சிப்ஸ்
8. வாழைக்காய் சிப்ஸ்
9. வறுபயறு
10. வெஜிடபிள் சமோசா
11. ரயில் கட்டிடம்
12. சீப்புச் சீடை

**பொடி வகைகள்:**

1. கருவேப்பிலைப் பொடி
2. பருப்புப் பொடி
3. இட்லிப் பொடி
4. சாம்பார்ப் பொடி
5. ரசப் பொடி
6. ஊறுகாய் மிளகாய்ப் பொடி

திருமண வைபவங்களுக்கு, பருப்புத் தேங்காய் அதிரசம், திரட்டுப்பால், சீர் முறுக்கு ஆகியவற்றை தயாரித்துக் கொடுக்கிறோம்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர்
அடையாறு சென்னை - 600 020
போன் : 412557

ஆட்-வென்சர்

# சமூக நியாயங்கள்

"மதம் மாறுவதை விட, வரதட்சணை கொடுப்பது தப்புன்னு உங்களுக்குத் தோணலையா?" என்றான் சந்துரு. வினிட்டா பதில் சொல்ல எத்தனித்த போது.

"சந்துரு! எல். ஒ. டி. புரொடக்ஷன் ரிஜிஸ்டரில்..." என்றபடி புரொடக்ஷன் மானேஜர் குறுக்கே வந்தார்.

"அப்ரண்டிஸ்னா ஏனோதானோன்னு இருக்கணுமா என்ன? பொறுப்பை இழுத்துப் போட்டுக்குங்க!" என்று அவர் அட்வைஸ் பண்ணும் நேரம், வினிட்டா மெதுவாய்ச் சந்துருவை விட்டு நகர்ந்தாள்.

ஒரு நாள் வேடிக்கையாகத்தான் பேச்சு ஆரம்பமானது. "நீங்க எதுக்குத் தாடி வச்சிருக்கீங்க?" என்று வினிட்டா கேட்க, சந்துரு அறுக்க ஆரம்பித்தான்.

"அப்ரண்டிஸ் பயிற்சியாளர்களுக்கு ஆயிரத்தைந்நூறு ரூபாய் ஸ்டைபெண்ட் வரணும். அது வரைக்கும் தாடியை எடுக்க மாட்டேன்."

"சரிதான். அப்ப தாடியை எடுத்தாப்பல தான்! நான் ஏதோ காதல் தோல்வியோன்னு நினைத்தேன்."

"அதுவும் வாஸ்தவம்தான். நான் லவ் பண்ணின பொண்ணுக்குக் கல்யாணம் ஆயிட்டுது."

"இண்ட்ரஸ்டிங். யாரது?"

"உங்களுக்குக் கூட அந்தப் பொண்ணை நல்லாத் தெரியும்!"

"யாரு?"

"அதாங்க, ரேவதி!"

"ச்சீய்! சரியான அறுவை."

"பொறுங்க! இன்னும் முடியலை. இப்ப ஒரு முஸ்லிம் பொண்ணை லவ் பண்றேன்."

"யாரு? நதியாவா? அறுவை தாங்கலை! ஆளை விடுங்க!"

"அதான் மதம் மாறலாம்னு பார்க்கிறேன்." என்று சந்துரு ஜோக் அடித்த போது, வினிட்டா சீரியஸானாள்.

சந்துரு கவனித்தான். அமைதியானான். இவளிடம் ஏதோ ஒரு சோகம் இருக்கிறது. நேரம் வரும்போது அவளே சொல்லட்டும் என்றிருந்தான். அவளே ஒரு நாள் சொன்னாள்:

கல்லூரி நாட்களில் வினிட்டாவிற்குக் கல்சுரல் காம்படிஷன்களில் நாட்டம் அதிகம். பல பரிசுகள், சர்டிபிகேட் எல்லாம் சர்வ சாதாரணம். ஓர் அனைத்துக் கல்லூரி கலை விழாவில் முதலில் நவாஸின் ரிங் டான்ஸைப் பார்த்து அதிசயித்தாள். 'ரியலி மார்வலஸ்' என்றாள் அவனிடம்.

முதல் பரிசு யாருக்கு என்பதில் அவர்கள் இருவர் கல்லூரிகளுக்குமிடையே கடும் போட்டி இருந்தது. கடைசியில் வினிட்டாவின் காலேஜ் அதைத் தட்டிச் சென்றது.

"புடைவைக்கு இருக்கிற மதிப்பு, எப்பவும் பேண்ட்டுக்குக் கிடையாது" என்று நவாஸ் கிண்டலடிக்க,

"டோண்ட் பி ஸில்லி. இந்த மெச்சூரிட்டி கூட இல்லைன்னா போட்டியில் பங்கேற்க வரக் கூடாது. நாங்க ஒண்ணும் புடைவையைக் காட்டிப் பரிசு வாங்கலை; எங்க திறமைக்குக் கிடைச்சது!" — என்றாள் வினிட்டா.

"அப்ப எங்களுக்குத் திறமையில்லையா?"

"ஸாரி. நோ கமெண்ட்ஸ்" என்று அவள் அதிராமல் சொன்னபோது நவாஸுக்கு எரிச்சல் வந்தது.

நவாஸ் அந்தக் கலைவிழாவின் தலைசிறந்த கலைஞனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான். ஆனால் எரிச்சல் அடங்கவில்லை.

அவள் கங்கிராட்ஸ் சொன்னபோது, கோபமாய் வந்து விட்டான்.

அடுத்த கலைவிழாவில் மோதல் தொடர்ந்தது. பாட்டுப் போட்டியில் இவள் முதல் பரிசு வாங்கினாள்.

'பார் பார் எனை
நம் பாவம் சுமக்கவே
பாரில் வந்தனை யேசு
பார் பார் எனை!'
என்று பாடினாள்.

"கிறிஸ்துவ நீதிபதிதானே! அதான் அவ கிறிஸ்துவப் பாட்டுப் பாடிப் பரிசைத் தட்டிட்டா..." என்று நவாஸ் சொல்ல, "நீங்க ஏன் இப்படியே கோணலா சிந்திக்கறீங்க? பெண்களுக்குத் திறமைக்கே பரிசு கிடைக்காதா? மதப்பாடல் பாடக் கூடாதுன்னு விதி இல்லை. பொதுவா நான் மதப் பாடல்களைத் தவிர வேறெதுவும் பாடறதில்லை. மேலும் பரிசுகளை வைத்து நான் திறமையை எடை போடுவதில்லை. ஏன்னா ஒரு கவிதைப் போட்டியிலே பாரதிக்கே

மூன்றாவது பரிசு தான் கிடைச்சது...''

என்று வினிட்டா பொரிந்து தள்ள; நவாஸ் அவளைத் தீர்க்கமாய் நிமிர்ந்து பார்த்தான்.

கொஞ்சம் கறுப்பு, முகம் நல்ல லட்சணம், தலை பின்னப்படவில்லை, காதில் டைமண்ட் வடிவில் ஸ்டட், கழுத்தில் சிலுவை...

இடுப்பில் செருகியிருந்த கர்ச்சீப்பை எடுத்து மேலுதட்டைத் துடைத்துக் கொண்டாள்.

''ஸாரி'' என்றான் நவாஸ். குரலில் உண்மை தெரிந்தது.

வினிட்டா ஆச்சரியப்பட்டாள்.. இவ்வளவு சீக்கிரம் அவன் மாறுவான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

''நீங்க என்ன பிராஞ்ச்?''

''எலக்ட்ரானிக்ஸ்.''

''அப்படியா? முத்துசாமி தெரியுமா? எல்லாரும் கதீட்ரல்ல ஒண்ணாப் படிச்சோம். எனக்கு ஒரு மார்க்ல போயிடுத்து.''

''என்ன அட்மிஷனா?''

''இல்லை. அப்ளையிங் க்வாலிபிகேஷன்,'' என அழகாய்ச் சிரித்தாள்.

மூன்றாவது விழாவில் பரிசை அவன் வாங்கினான். வினிட்டா 'தம்ஸ்-அப்' செய்து, கண்ணடித்தாள். ''என்ன சந்தோஷமா?'' என்று கேட்டாள்.

''முதல் முறையாப் பரிசு கிடைச்சிருக்கு! எங்க பிரின்சியை உடனே பார்க்கணும்.'' என்று சந்தோஷத்தில் குதித்தாடினான். பின்பு அவளைப் பார்த்தபோது மிகவும் வருத்தப்பட்டான்.



அருள்வாக்கு



**வே**தப் பொருளான பரமாத்மா, தசரதன் குழந்தையாக வேஷம் போட்டுக் கொண்டவுடன், வேதமும் வால்மீகியின் குழந்தையாக, ராமாயணமாக வந்துவிட்டது. அந்த ராமாயணம் முழுக்க எங்கே பார்த்தாலும் தர்மத்தைத் தான் சொல்லியிருக்கிறது. ஊருக்குப் போகிற குழந்தைக்குத் தாய் பட்சணம் செய்து தருகிற வழக்கப்படி கௌஸல்யா தேவி காட்டுக்குப் போகிற ராமனுக்குப் பதினாலு வருஷங்களும் கெட்டுப் போகாத பட்சணமாக இந்தத் தர்மத்தைத்தான் கட்டிக் கொடுத்தாள். 'ராகவா, நீ எந்தத் தர்மத்தை த்ருதியோடு, அதாவது தைரியத்தோடு, நியமத்தோடு அநுசரிக்கிறாயோ, அந்தத் தர்மம் உன்னை ரக்ஷிக்கும்' என்று ஆசீர்வாத பட்சணம் கொடுத்தாள்.

நியமம், அதாவது தனது என்ற விருப்பு வெறுப்பு இல்லாமல் சாஸ்திரத்துக்குக் கட்டுப்படுவது முக்கியம். அதே போல் தைரியம் முக்கியம். ஒருத்தர் பரிகாசம் பண்ணுகிறார் என்று தர்மத்தை விடக் கூடாது. ராமனை சாட்சாத் லக்ஷ்மணனே பரிகசித்தான். "அண்ணா! நீ தர்மம், தர்மம் என்று எதையோ கட்டிக் கொண்டு அழுவதால்தான் இத்தனை கஷ்டங்களும் வந்திருக்கின்றன. அதை விட்டுத் தள்ளு. தசரதன் மேல் யுத்தம் செய்து ராஜ்யத்தை உனக்கு நான் ஸ்வீகரித்துத் தர அனுமதி தா" என்று அன்பு மிகுதியால் சொன்னான். ஆனால் ராமன் யார் எது சொன்னாலும் பொருட்படுத்தாமல் தர்மத்தையே காத்தான். கடைசியில் அது அவனைக் காத்தது. தர்மம் தலைகாத்தது. ராவணனுக்குப் பத்து தலைகள் இருந்தும் அதர்மத்தால் கடைசியில் அத்தனை தலைகளும் உருண்டு விழுந்தன. ஸ்ரீ ராமன் இன்றும் 'ராமோ விக்ரஹவான் தர்ம:' என்றபடி தர்மத்தில் தலைசிறந்து தர்ம ஸ்வரூபமாக அநுக்கிரஹம் செய்து வருகிறான்.

சாக்ஷாத் ஸ்ரீராமனை லட்சியமாகக் கொண்டு, "ராமராம" என்று மனசாரச் சொல்லிக் கொண்டே இருக்கிறவர்களுக்குச் சித்தமலங்கள் எல்லாம் விலகும். தர்மத்தை விட்டு எந்நாளும் விலகாமல் அவர்கள் ஆனந்தமாக வாழ்வார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

"எங்க பிரின்ஸி எங்களைச் சரியாக் கௌரவிக்கலை. பரிசு கிடைச்சதுன்னு சொன்னா, வேறே எந்த காலேஜூம் வரலையான்னு கிண்டல் வேறே!"

"சரி விடுங்க. கலை, காதல் மாதிரி. அருமை தெரிந்தவன்தான் மதிப்பான்!"

நவாஸ் வினிட்டாவை நிமிர்ந்து பார்த்தான். கண்களில் பொய்யில்லை.

**த**ற்செயலாகச் சந்தித்துக் கொண்டிருந்தவர்கள், நேரம் குறித்துக் கொண்டு சந்திக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் வெளியே போக ஆரம்பித்தது வினிட்டா அப்பாவிற்குத் தெரிய வந்தது. நவாஸிடம் பேசினார்:

"எல்லாம் கேள்விப்பட்டேன். இப்ப அவளைக் கல்யாணம் பண்ணித் தாரேன். கூட்டிட்டுப் போறீங்களா?"

என்று அவர் சொன்னபோது, குரலின் கடுமை உணர்ந்து அமைதியானான்.

அவர் இவ்வளவு தடாலடியாகப் பேசுவார் என்று நினைக்கவில்லை.

"நாங்க கஷ்டப்பட்டு அவளைப் படிக்க வைப்போம். நீங்க வந்து ஊர் சுத்தக் கூட்டிட்டுப் போறீங்க! 'பெற்றோர் எல்லாம் மடையன்களா?"

"இல்லை. இப்ப கல்யாணம்..."

"தெரியும். முடியாது. உங்களுக்குப் படிப்பு முடிஞ்சு, வேலை கிடைச்சுச் சுயமா சம்பாதிக்கற வரை சப்போர்ட் பண்ண, நான் என்ன முட்டாளா?"

நவாஸ் பதில் பேசவில்லை. இந்தக் கோணத்தில் அவர் பேசுவார் என்று எதிர்பார்க்கவில்லை.

"என்னடா! இவ்வளவு பச்சையா பேசறேன்னு தோணுதா? உங்களை மாதிரி அப்பா காசிலே ஹோட்டல், சினிமான்னு சுத்தறவங்களுக்கு, அதுல துணையோட வேற, நாங்க எப்படிப் புரிய வைக்கிறது?"

"ஸார். இதுல வந்து..."

"போறது. நீ ஒரு முஸ்லீம். நாங்க கிறிஸ்டியன்ஸ்."

"ஸார். கிறிஸ்டியன், முஸ்லிமெல்லாம் நாமே வகுத்துக்கிட்டது. எங்களோட கடவுள் நபிதான் உங்க இயேசு."

"ஸ்டாப் இட்! ஐ டோண்ட் வான்ட் டயலாக்ஸ். எனக்கு இப்ப ஏக நாதரைப் பற்றியோ, அல்லாவைப் பற்றியோ கவலை இல்லை. என்னோட கவலை சமுதாயத்தைப் பற்றியது. எனக்குச் சமூகம் என்ன நினைக்கும்ங்கிறதுதான் முக்கியம், அவசியம்!" என்று ஒரேயடியாக முடித்து விட்டார்.

**எ**ன்றால் அப்பாவை மீற முடியவில்லை. நவாஸ், மதம் மாறினால் தம் வீட்டில் ஆதரவு கிடைக்கும், 'கட்டிய புடவையோடு வா — அது போதும்' என்ற போது அதையும் மறுத்தேன்.

அவள் கதையைச் சொல்லி முடித்த போது கண்கள் கலங்கியிருந்தன.

**ஒ**ரு நாள் வினிட்டாவைத் தேடி ஒரு வயதான அம்மாவும் ஓர் ஆணும் வந்தார்



ரமேஷ், B. Sc., M. B. A., & கல்யாணி, B. Sc.

குட்டி & காசி மானேஜிங் பார்ட்னர் ஸ்ரீ சேஷாத்திரி அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ரமேஷ் அவர்களுக்கும் ஏ. ஆர். வி. இன்ஜினியரிங் இண்டஸ்ட்ரீஸ் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ ஆர். வி. ராகவன் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி கல்யாணி அவர்களுக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.



எங்களுடைய குமாரன், செல்வன் கோபால் பரந்தாமன், A. C. A., AICWA, ACMA (London) Chartered Accountant, Bahrain அவர்களுக்கும் திருமதி & திரு. A. K. சாரங்கபாணி (இன்சூரன்ஸ் அதிகாரி) அவர்களின் குமாரி செல்வி லட்சுமி வசுமதி அவர்களுக்கும் சென்னையில் 23.11.87 அன்று முக்தா மண்டபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தது. திருமணத்திற்கு வருகை தந்த சுற்றத்தினருக்கும் நண்பர்களுக்கும் பிரமுகர்களுக்கும், ப்ரேம் நஸீர், சிவகுமார், ஏனைய நடிகர்களுக்கும் மஹா பிரஸாதம் அனுப்பிய இசை மேதை திருமதி M. S. சுப்புலட்சுமி - திரு. சதாசிவம் தம்பதிகள் அவர்களுக்கும் எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

திருமதி & திரு. வேணுகோபாலன் FIE,
172, ரங்கராஜபுரம் சாலை, சென்னை — 24.

கள். வினிட்டா அவர்களிடம் பவ்யமாய்ப் பதில் சொன்னாள். அந்தம்மாள் தலையசைத்துக் கொண்டே, கம்பெனியை நோட்டமிட்டாள்.

"ரிசைன் பண்றதுல ப்ராப்ளம் இருக்காதே? அல்லது பாண்டு எதுவும் கொடுத்திருக்கியா?" என்றாள் வினிட்டாவிடம்.

"இல்லீங்க."

"அவசரப்பட்டுப் பண்ண வேண்டாம். அவனுக்கு டிரான்ஸ்ஃபருக்கு வழி இருக்கான்னு பார்ப்போம்... தம்பி யாரு?"

"சந்துரு. எங்கூட வேலை பார்க்கிறார்."

சந்துரு கைகூப்பினான்.

"நல்லாயிருப்பா!" என்றாள்.

சந்துரு மானேஜர் அறைக்குப் போனான். "பொண்ணு தங்கமான பொண்ணு. வேலையில் படு கெட்டி. நல்லா முன்னுக்கு வருவா!" என்று மானேஜர் அந்த அம்மாளுடன் வந்த ஆளிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

சந்துருவிற்கு எல்லாம் புரிந்து போனது. வினிட்டாவிடம் கேட்டான்.

"என்ன மாப்பிள்ளை வீட்டுக்காரங்களா?"

"ஆமா. எப்படிக் கண்டுபிடிச்சீங்க?"

"அந்தத் தோரணையிலேயே தெரியுதே!"

"ஆமா! எனக்கும் அதான் பிடிக்கலே. ஆனால் நாங்க என்ன பண்ண முடியும்?" என்றாள் வினிட்டா. "ரொம்ப வேறே டிமாண்ட் பண்றாங்க. அப்பா எப்படியாவது முடிக்கணும்னு நிக்கறாரு. அவருக்கு நல்ல வேலை. மேரேஜ் அட்வான்ஸ் பதினையாயிரம் வாங்குன்னு, அப்பா சொன்னாரு. அட்வான்ஸ் வாங்கணும்னா சர்டிபிகேட்டை சரண்டர் பண்ணுன்னு கம்பெனி சொல்லுது. அதுவும் சரிதான். எதை நம்பி அட்வான்ஸ் தருவாங்க? ஆனா, பிரச்னை இதுதான்: அவங்க 'எப்பவும் ரிசைன் பண்ணத் தயாரா இரு' அப்படின்னு சொல்றாங்க. என்ன பண்ண? ஒரே குழப்பமா இருக்கு. இதுக்கெல்லாம் காரணம் அவர் தான். அம்மா, அப்பாவை எதிர்த்துத் தைரியமாப் பேசணும். ஆனால் அவருக்குப் பயம். எல்லாமே ஆண்கள் ராஜ்யம்தானே..." என்று அவள் பேசிக் கொண்டே போனது போதுதான், சந்துரு கேட்டான்.

"மதம் மாறுவதைவிட, வரதட்சணை கொடுப்பது தப்புன்னு தோணலையா?"

"அது முடிஞ்சு போன அத்தியாயம். தயவு செய்து கிளறாதீங்க!"

"ஸாரி. உங்க பழசைக் கிளறுவது என்னோட நோக்கமல்ல. உங்க கண்ணோட்டம் எனக்குப் புரியலே!"

"அப்ப நான் மதம் மாறி, அவனோட போயிருந்தா, இந்தச் சமூகம் என்ன சொல்லும்? நான் எவ்வளவு பெரிய எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருக்கும்? அதான் தெளிவாச் சொன்னேனே, எங்க அப்பாவை மீற முடியவில்லைன்னு."

"இதே மாதிரி, இந்தப் பையனும் அப்பா அம்மாவை மீற முடியாதவனாக இருக்கலாம். அதனாலே அவங்க வரதட்சணை, நகை... கேட்கிறாங்க. நீங்க அந்தப் பையனைக் கோழைன்னு ஏசறீங்க. உங்களுக்குன்னு வரும்போது, சமூகம், கட்டுப்பாடு. ஆனா, மத்தவங்க அதை எதிர்த்துப் போராடணும் இல்லையா?"

வினிட்டா திகைத்து அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"நீங்க உங்களோட சௌகரியமான எல்லையை விட்டு வெளியே வர விரும்பலே. அது போலத்தான் அவரும். இதில உங்களுக்கு, அவரையோ, ஆண் வர்க்கத்தையோ, குறை சொல்லத் தார்மீக உரிமையில்லை" என்று முடித்தான் சந்துரு.

வினிட்டா மௌனமாக வெளியேறினாள்.

---



"மில்லினியத்தைப் பார்த்து அமைச்சர்களெல்லாம் ஏன் பயப்படுகிறார்கள்?"
"அதிலே mgr இருக்கிறாரே!"

— அ. பெ. ரவி.



---



* "ஆனாலும் டைப்பிஸ்ட் லதாவிற்கு ரொம்பத் திமிர்."

"எப்படிச் சொல்றே?"

"பிழையில்லாமல் 'லவ் லெட்டர்' எழுதுபவர்களுக்கு நூறு ரூபாய் பரிசுன்னு போட்டி அறிவிச்சிருக்கான்னா பார்த்துக்கோயேன்!"

— கோ. க. சுரேஷ்.





# எழுபத்து மூன்று வயதிலும் எதிர்காலம் உண்டு

**18**

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV**

**ராஜ்மோகன் காந்தி**

கிருஷ்ணமேனனின் உடல்நலம் பாதிக்கப்பட்டிருந்தது. எனவே லண்டனில் இந்தியத் தூதராக அவருக்குப் பதில் ராஜாஜி சில காலத்துக்கேனும் பொறுப்பேற்று நேருவுக்கு உதவ வேண்டும் என்று மவுண்ட்பேட்டன் கேட்டுக் கொண்டிருந்தார். இந்த யோசனையை ஜவாஹர்லால் ஆமோதித்தார். மவுண்ட்பேட்டனுக்கு ஸி. ஆர். எழுதினார்:

"நீங்களும் எட்வினாவும் (திருமதி மவுண்ட்பேட்டன்) ஜவாஹர்லாலிடம் மிகுந்த கரிசனம் கொண்டிருக்கிறீர்கள்; அதனால் உங்களுக்கு மற்றவர்களைப் பற்றி எண்ணிப் பார்க்கவே கண்களும் மனமும் இல்லை என்பதைக் கூற எனக்கு அனுமதி தாருங்கள்! ராஜாஜி சிகரெட்டைப் பற்ற வைக்க உபயோகப்படும் ஒரு தீக்குச்சிதான். அதன் பயன் முடிந்த பிறகு அதனை ஒரு கண நேர யோசனை கூட இன்றிச் சாம்பல் கிண்ணத்தில் தூக்கி எறிந்து விடலாம்...

"நான் மிகவும் களைத்துப் போயிருக்கிறேன். ஓய்வுக்காக ஏங்குகிறேன். இதனை உங்களால் ஊகித்து உணரவே முடியாது. நான் ஓய்வு பெற்ற பிறகு மற்றவர்கள் கதி என்னவாகும் என்பது பற்றிக் கவலைப்படத் தயாராக இல்லாத அளவுக்கு நான் சோர்ந்து போயிருக்கிறேன். ஜவாஹர்லால்ஜியைக் கடவுள் கவனித்துக் கொள்வார் என்பது எனக்குத் தெரியும். எனது உடலும் அறிவும் ஆரோக்கியமாக இருக்கும் காலத்திலேயே நான் வேலையிலிருந்தும் கனே பரத்திலிருந்தும் விடுதலை பெற்று அமைதி காண விரும்புகிறேன். 'ஞாபக சக்தியை இழந்துவிட்ட வயதான முட்டாள்' என்று அறிவிக்கப்பட்ட பிறகு பதவியிலிருந்து ஓய்வு பெற நான் விரும்பவில்லை.

"என்னுடைய பதவிக் காலம் அதனுடைய கோணல் மாணல்களினாலேயே தனித்தன்மை பெற்று விட்டது! மந்திரி சபையில் அமைச்சர்; அதிகாரம் ஏதுமற்ற கவர்னர்; புதிய அரசியல் சாசனத்துக்கு வழிவிட்டுப் பழைய சாசனத்தைச் சுருட்டி மூலையில் வைக்கிற சமயத்தில் கவர்னர் ஜெனரல்; இலாகா ஏதுமற்ற அமைச்சர்; உள்துறை அமைச்சர் — நாடாளுமன்றப் பணிகள்; இப்போதோ, பிரிட்டனில் தற்காலிகத் தூதர் பதவி வேறு எனக்காகச் சிபாரிசு செய்யப்படுகிறது! கடைசியில், எங்கேயாவது ஒரு தலைமை எழுத்தர் பதவியையும் சந்தோஷமாக ஏற்று, அந்தப் பதவிக்கு உரிய கௌரவத்தையும் முக்கியத்துவத்தையும் உணர்த்தும் விதமாக நான் நடந்து கொள்ள வேண்டும் என்று கூட எதிர்பார்க்கப்படும் போலும்! உங்களுக்குக் கருணை உள்ளத்தை இறைவன் அருளட்டும்!"

ஸி. ஆரின் மனக்கசப்பையும் வருத்தத்தையும் இந்தக் கடிதம் தெளிவாக உணர்த்துகிறது. ஆனாலும் முடிந்த முடிவாக ஒரு பிளவு உருவாகுமா? அதனை நாட்டு நடப்புக்கள் அனுமதிக்குமா? அல்லது ஸி. ஆரின் குண இயல்புதான் ஏற்குமா? நேருவுக்கு இவ்விஷயத்தில் சந்தேகம் இருக்கவே செய்தது. ஸி. ஆர். விடைபெறுகிறார் என்பனித எல்லா முதலமைச்சர்களுக்கும் அறிவித்த ஒரு கடிதத்தில், "அவர் அருகில் இல்லாதததை நாம் பெரிதும் உணர்வோம்; என்னுடைய சுமைகள் அதிகரிக்கும்" என்று

எழுதிய நேரு, பின்வருமாறு கடிதத்தை முடித்தார்: "அவர் ஓய்வு பெறுவதைக் கொஞ்ச காலத்துக்கு அதிகமாக இந்தத் தேசம் ஒப்புக் கொள்ளாது என்று நான் திடமாக நம்புகிறேன்."

**ஸி.** ஆர். தில்லியில் தங்கியிருந்த கடைசி சில வாரங்கள் பத்திரிகைச் சட்டம் அமுலுக்கு வருகிற கால கட்டமாக இருந்தன. சற்று அவகாசம் கிடைத்தால் அந்தச் சமயங்களில் மரண தண்டனை பெற்ற கைதிகளின் கருணை மனுக்களைப் பரிசீலிக்க வேண்டியிருந்தது. வழியனுப்பு உபசாரமாக ஒரு பொதுக் கூட்டம் நடந்தது. அதில் நேரு கலந்து கொண்டு பேசினார். அப்போது ஸி. ஆர்., "இனி என்னுடைய பிரார்த்தனைகள் ஆட்சியில் இருப்பவர்களுக்கு உதவும். என்னுடைய அறிவு அல்ல" என்று கூறினார். காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர்கள் கூட்டம் ஒன்றில் ஓர் எம். பி. சொன்னார்: "ஸி. ஆர். சமீப காலத்தில் பல புதிய சட்டங்களை நிறைவேற்றி வைத்திருக்கிறார். ஆனால் அதெல்லாம் போதாது; அவர் தொடர்ந்து பதவியில் நீடித்து நாட்டுக்கு உதவ வேண்டும் என்பதாக ஒரு மசோதா கொணர்ந்து அதை நாம் சட்டமாக நிறைவேற்றி வைக்க வேண்டும்!" இந்தப் பேச்சு, ராஜாஜியின் உள்ளத்தைத் தொட்டது. ஆனால், அவர் முடிவை மாற்றி விடவில்லை.

வழக்கமான பண்பாட்டுடன் ஜவாஹர்லால் பிரிவுபசார விருந்து கொடுத்தார். பிரஸாத் வந்து கலந்து கொண்டார். விமான நிலையத்துக்கும் இருவருமே வந்திருந்தனர். ஆஸாத்தும் மற்ற மந்திரிகளும் அங்கே இருந்தனர். ராஜதந்திரிகள் சிலர் குழுமியிருந்தனர். அனைவரிடமும் விடைபெற்று, 1951, நவம்பர் முதல் தேதி, ராஜாஜி சென்னைக்கு விமானமேறினார்.

மீனம்பாக்கத்தில் அவரை வரவேற்க ஆட்சியில் இருந்தவர்களும் ஆளப்பட்ட மக்களும் கூடியிருந்தனர். தமிழ்த் தாயின் பெருமிதத்துக்குரிய புதல்வர் பாரதத்துக்கே சிறப்புப் பணியாற்றிவிட்டுத் திரும்பி வரும் போது அவரை வரவேற்கக் காத்திருந்தனர். அப்போது ராஜாஜிக்கு வயது எழுபத்து மூன்று!

**ப**ஸுலுல்லா சாலை வீட்டுக்குத் திரும்பி வந்து வாழத் தொடங்கிய ஸி. ஆர்., தமது மகாபாரதம்பெருவெற்றி அடைந்திருப்பதில் மகிழ்ந்தார். தமிழ் மூலம், ஆங்கில மொழி பெயர்ப்பு ஆகிய இரு நூல்களுமே விற்றுப் போய்விட்டன. மறுபதிப்புக்கள் வெளியிட ஏற்பாடுகள் நடந்து வந்தன.

ஜவாஹர்லாலிடமிருந்துசிநேகமானசிறு கடிதங்கள் அவ்வப்போது வந்தன. "நீங்கள் இல்லாமல் தில்லி ஏதோ வித்தியாசமாகத் தோன்றுகிறது" என்றும், "நான் தனிமையை இப்போது உணர்கிறேன்" என்றும் எழுதினார்.

ஸி. ஆர். தமது சுய சரித்திரத்தை எழுத வேண்டும் என்று நண்பர் ராமராவ் கருத்துத் தெரிவித்தார். ஆனால் அது ஸி. ஆருக்குப் பிடிக்கவில்லை. அநேகமாக எல்லாச் சுயசரிதங்களும் தங்களைத் தாங்களே புகழ்ந்து கொள்வதாகவும் தங்கள் செயல்களுக்குத் தாங்களே நியாயம் கற்பிப்பதாகவும் அமைகின்றன என்பதால் அவருக்குச் சுயசரிதம் என்றாலே பயம்! அந்த நோயிலிருந்து தாம் தப்பிக்க முடியுமா என்ற சந்தேகமும் அவருக்கு இருந்ததால் சுய சரிதம் என்ற எண்ணத்தையே அவர் வெறுத்தார். மேலும் சுயசரிதம் எழுதினால் அது, தமக்கு இனி இறந்த காலம் மட்டுமே உண்டு, எதிர்காலம் கிடையாது என்பதை ஒப்புக் கொண்டதாகும்! ஆனால் அத்தகைய உணர்வு அவருக்கு ஏற்படவேயில்லை. ஓய்வு தேவை என்று கருதினார்; அதைப் பெற முடிந்ததில் மகிழ்ந்தார். கூடவே பயனுள்ள எதிர்காலத்தையும் எதிர்நோக்கியிருந்தார்.

ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன் எழுதிய வீர சாகச நாவல்களைப் படித்தார், ஸி. ஆர். அவை அற்புதமாகப் படைக்கப்பட்டுள்ளன என்று ராமராவுக்குத் தாம் எழுதிய கடிதத்தில் விமர்சித்த அவர், "நீங்கள் வெகு காலம் முன்பே இவற்றைப் படித்திருப்பீர்கள்; ஆனால் நான் எனது இரண்டாவது குழந்தைப் பிராயத்தில் படிப்பதற்காக இவற்றை ஒதுக்கி வைத்திருந்தேன் போலும்!" என்று குறிப்பிட்டார். 'ராமாயணத்தைக் கல்கி பத்திரிகையில் தொடர்ந்து எழுதி வர வேண்டும்' என்று அதன் ஆசிரியரும் ஸி. ஆரின் நண்பருமான கிருஷ்ணமூர்த்தி கேட்ட போது உடனே அதற்கு ஒப்புக் கொண்டார் ஸி. ஆர்.

ஆன போதிலும் உலக நடப்புக்களுக்கு முதுகு காட்டி அவர் துறவியாகி விடவில்லை. நாடாளுமன்ற எம். பி. பதவியைக் கூட ராஜினாமா செய்து விடவில்லை. அவர் சன்னியாசி போல் வாழ விரும்புவதாக ஒரு நாளிதழ் குறிப்பிட்ட போது, உடனே, அதற்கு மறுப்புத் தெரிவித்தார். "அத்தகைய பரமானந்த நிலையை அடைகிற மனப்பக்குவத்தை நான் இன்னும் பெறவில்லை" என்று எழுதினார். இதைப் படித்துவிட்டு வியப்படைந்த ஒரு பம்பாய்ப் பத்திரிகையாளர், "ராஜாஜியின் மறுப்பானது அடுத்ததாக எந்தப் பதவியில் அவர் அமர்வாரோ என்று நம்மை யோசிக்க வைக்கிறது!" என்று எழுதினார். அது ரொம்பவும் கெட்டிக்காரத்தனமான ஒரு விமர்சனம்தான். ஆனாலும் அந்தப்பத்திரிகையாளரே கூட, மூன்று மாதங்களுக்குப் பிறகு ராஜாஜி சென்னை மாகாண முதலமைச்சராகப் பதவி ஏற்றபோது, மற்ற எல்லோரையும் போல் தாமும் திடுக்கிட்டுத்தான் போயிருப்பார்!

தமிழாக்கம்: **கி. ராஜேந்திரன்**

---

**(ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV முற்றும். ஐந்தாம் பாகம் 1988 ஏப்ரல் 17 உ கல்கி புத்தாண்டுச் சிறப்பிதழில் ஆரம்பமாகும்.)**





# சிப்-சாப்

நீங்களே இயக்கக் கூடிய எலக்ட்ரானிக் கிட்

எதிர் காலத்தில் வரப்போகும்
புதிய உலகிற்கோர் ஆரம்பம்

எல்லோருக்கும்
தேவையான
எலக்ட்ரானிக்ஸ்




100க்கும்
மேற்பட்ட
நீங்களே கற்றுக்
கொள்ளும்
வகையில்
அமைந்த கல்விப்
பாடங்களுடன்
தபால் செலவு தனி

சிப்-சாப் இப்பொழுது வெளி
நாட்டில் பிரசித்திப் பெற்றுள்ளது.



எளிதில் புரிந்துக் கொள்ளக் கூடிய படங்கள் அடங்கிய புத்தகம். பாட்டரியினால் இயக்கப் படுவதால் பாதுகாப்பானது. விளையாட்டு நேரத்தை கழிப்பதுபோல் இதன் மூலம் மகிழ்ச்சி கிடைப்பதோடு வீட்டிலிருந்துக் கொண்டே எலக்ட்ரானிக்ஸ் கற்றுக் கொள்ளலாம். சால்டரிங் எதுவும் தேவையில்லை. இதனை இணைப்பதற்கு எந்த உலோகமும் தேவையில்லை ஒரு சிப் துணையோடு உங்களுக்குத் தேவையான திருடனைப் பிடிக்கும் அலாரம், மின்னல்கள், தீ அலாரம், இசைக் கருவிகள்; டிரான்ஸ் மீட்டர்கள் முதலியன உருவாக்கலாம்.

உங்கள் கல்விக் கூடமோ
அல்லது சமூகமோ எதுவானாலும்
தேவையானது சிப்-சாப்

**எடுடெக்,**

33, சர்ச் வீதி,
பெங்களூர்-560 001.
இந்தியா
தொலைபேசி 578801

**எல்லா டாய் கடைகளிலும் கிடைக்கும்**

VINYAS



• தேசிய ஒருமைப்பாட்டைச் சொன்ன குழந்தைகள் கலைநிகழ்ச்சி.

# பெரியவர்களும் கலந்து கொண்ட குழந்தைகள் மாநாடு

ஒரு குழந்தை, கையில் காகிதத்தில் எழுதிய சிறுவர் பாடல் ஒன்றை வைத்துக் கொண்டு வெகு உற்சாகமாக, சுத்தமான தமிழில் இடராமல் பாடிக் கைதட்டலைப் பெற்றது. பல கவிஞர்களின் பாடல்களைக் குழந்தைகள் தாங்களாகவே இசையமைத்துப் பாடுகிற ஓர் இனிய நிகழ்ச்சி அது.

அந்தப் பாடலைச் சிறுவன் பாடி முடித்ததும் அறிவிப்பாளர் சொன்னார்: "இச்சிறுவனுக்குத் தமிழே தெரியாது! குழந்தை முருகனைப் பற்றிய கவிஞரின் பாடலை ஹிந்தியில் எழுதி வைத்துக் கொண்டு அப்படியே பாடினான்!" இவ்வாறு கூறியதோடு சிறுவன் கையிலிருந்த தாளை வாங்கி அனைவரும் காணக் காட்டினார். அவையோருக்கு ஒரே ஆச்சர்யம்! மீண்டும் கைதட்டல்! மேடையில் இருந்த ஒரு கவிஞர் உணர்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் தம்மைக் கௌரவிக்க அணிவிக்கப்பட்டிருந்த உத்தரீயத்தை எடுத்து அந்தச் சிறுவனுக்குப் போர்த்தி மகிழ்ந்தார்.



• கவிதைத் துறையில் முதல் பரிசுபெற்ற கவிஞர் மு. வை. அரவிந்தனைக் கௌரவிக்கிறார் அமைச்சர் ப. சிதம்பரம்.

கோவையில் நடந்த எட்டாவது குழந்தை இலக்கிய மாநாடு, எழுத்தாளர்கள் மாநாடாக மட்டும் இராமல் குழந்தைகள் மாநாடாகவும் திகழ்ந்ததுதான் அற்புதம்! அண்மை மாநிலங்களிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்த மாநாட்டில் குழந்தைகளின் கலைநிகழ்ச்சிகள் மிகவும் தரமாக அமைந்திருந்தன.

மாநாட்டில்பேசியவர்கள், குழந்தை இலக்கியம் என்பது குழந்தைகளின் மனோபாவத்தைப் புரிந்து கொண்ட இலக்கியமாக இருக்க வேண்டும் என்பதை நன்குணர்ந்து பேசினார்கள்.

விமலா ரமணி சொன்னார்: "வாசலில் வந்து நிற்கிறான் சட்டிக்காரன். குழந்தை உள்ளே வந்து அப்பாவிடம் சொல்கிறது: 'அப்பா உன்னைத் தேடிக் கொண்டு யாரோ பெரிய தலைப்பாகையுடன் ராஜா மாதிரி வந்திருக்கிறார்!'

"வந்திருப்பது யார் என்று புரிந்து போகத் தகப்பனார் உடனே, 'அப்பா, வீட்டில் இல்லை என்று சொல்லு போ!' என்கிறார்.

"இந்தப் பொய்க்கு அடுத்த நாளே பலன் கிடைக்கிறது! அந்தப் பிள்ளை தன் சிநேகிதன் வீட்டில் இருந்து கொண்டே தன்னைத் தேடி அப்பாவோ அம்மாவோ வரும்போது தான் அங்கே இல்லை என்று நண்பனைச் சொல்லச் சொல்கிறான்! பெற்றோர் மகனை ஊரெல்லாம் தேடி அலைகிறார்கள்..."

குழந்தைகள் இலக்கியம் எழுதுவது என்பது பெரியவர்களுக்கு எழுதுவதை விடவும் எவ்வளவு கஷ்டம் என்பது இதிலிருந்து புரியும். குழந்தைகளை நல்வழிப்படுத்தவும் வேண்டும், உபதேசமாகவும் இருக்கக் கூடாது. சிறுவர் சிறுமியரின் மனப்பான்மையைப் புரிந்து கொள்ள எழுத்தாளன் குழந்தையாகவே மாற வேண்டும்.



மாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசிய அமைச்சர் ராமச்சந்திரன். அமர்ந்திருப்பவர்கள்: எஸ். வி. சிட்டிபாபு, வாண்டுமாமா, தணிகை உலகநாதன்.

இந்தக் குழந்தை உள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டுவது போலிருந்தது இன்னொருவர் கூறிய கருத்து:

"ராமாயணம் பாரதம் போன்ற அறநெறி சார்ந்த கதைகளை மனத்தில் பதிய வைத்து வளப்படுத்த ஏற்ற பருவம் பிள்ளைப் பிராயம் தான். இந்த வாய்ப்பைத் தவற விட்டு விட்டால் போச்சு! வளர்ந்து பெரியவர்களானால் 'இது சரியா? இப்படி நடக்குமா?' என்ற ஆராய்ச்சிப் புத்தி வந்துவிடும். மகாத்மா காந்தி கூட அரிச்சந்திரன் கதையைச் சின்ன வயதில் கேட்ட காரணத்தால்தான் சத்தியத்தின்மேல் அசைக்க முடியாத நம்பிக்கை வைத்தார். வளர்ந்து விட்டவரிடம் போய் அரிச்சந்திரன் கதையைச் சொன்னால், 'உண்மை பேசினால் இத்தனை கஷ்டங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறதே, பிறகு உண்மை ஏன் பேச வேண்டும்? கொஞ்சம் அசத்தியமாகத்தான் நடந்து கொள்ளலாமே' என்று வாதாடுவார்...!"

ஆனால் எத்தனை பெற்றோர்கள் குழந்தைகளுக்கு இன்று கதை கூறி வளர்க்கிறார்கள்? உபந்நியாசம் செய்வதையே வாழ்க்கையாகக் கொண்ட சுகிசிவம் சொன்னார்:

"இரவில் களைத்துப் போய்த் திரும்பும் நேரத்தில் குழந்தை அருகே வந்து, 'கதை ஏதாவது சொல்' என்று கேட்கிறது. 'என்னால்முடியாதுஉன் அம்மாவிடம்போய்க் கேள்' என்று விரட்டுகிறேன். அவளும் வீட்டு வேலையில் அயர்ந்திருப்பவள். 'என்னால் ஒன்றும் முடியாது' என்று விரட்டுகிறாள். குழந்தை தவிக்கிறது. ஊருக்கெல்லாம் இரண்டு மணி நேரம் கதை சொல்கிறேன்; என் குழந்தைகளுக்குக் கதை கூறி மகிழ்விக்க முடியவில்லை...!"

**கா**லம் அப்படியாகி விட்டது. எனவே பெற்றோரால் செய்ய முடியாமல் போகிற அந்தக் கடமையைச் செய்து, குறையை இட்டு நிரப்புகிற குழந்தை எழுத்தாளர்களுடைய பொறுப்பு எவ்வளவு அதிகமானது!

அந்தக் கடமையை அவர்கள் செவ்வனே செய்தாலும், அவர்கள் எழுதும் நூல்கள் எந்த எண்ணிக்கையில் அச்சாகின்றன; அச்சாகும்நூல்களில்எவ்வளவு,எத்தனை ஆண்டுகளில் விற்பனையாகின்றன என்று பார்த்தால் மிகப் பெரிய ஏமாற்றமே ஏற்படும்.

இந்த ஏமாற்றம் மாறி மகிழ்ச்சி உருவாக வேண்டுமானால் நூலக இயக்கத்தின் முக்கியத்துவத்தை அரசு புரிந்து கொண்டு செயல்பட வேண்டும். ஒவ்வொரு நூலகத்தையும் விருத்தி செய்வதுடன், ஒவ்வொரு நூலகத்திலும் குழந்தைகள் நூலகப் பகுதியும் உருவாக வேண்டும். இலவசமாக எதை எதையோ மக்களுக்குக் கொடுக்கிறவர்கள், இலவசமாக நூல்களை வழங்க வேண்டாம்; இரவலாகப் பெற்றேனும் மக்கள் நூல்களைப் படித்துப் பயன்பெற உதவ வேண்டாமா?

இந்த மாநாட்டு மேடையில் பல்வேறு எழுத்தாளர்கள் எழுதிய சுமார் ஐம்பது நூல்கள், பல்வேறு பதிப்பகத்தாரால் பிரசுரிக்கப்பட்டு, குழந்தை எழுத்தாளர் சங்கம் மூலம் வெளியிடப்பட்டன. தமிழக அமைச்சர் பண்ருட்டி எஸ். ராமச்சந்திரன், மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் ஆகியோர் கலந்து கொண்டு பேசினார்கள். பேசியதெல்லாம் சரி. நூலக இயக்கத்துக்கு என்ன செய்யப் போகிறார்கள்?

அமைச்சர் எஸ். ராமச்சந்திரன் 'பிள்ளை—குட்டிகள்' என்ற சொற்றொடரைக் குடும்பக் கட்டுப்பாடு பிரசாரத்துக்கு ஏற்ப விளக்கினார்: "ஒரு குழந்தை என்றால் அது பிள்ளை; ஒன்றுக்கு மேற்பட்டுப் பிறந்தால் குட்டிகள்தானே!" என்று கூறி விலங்குகள் போல் குட்டி போட்டுத் தள்ளக் கூடாது என்று உணர்த்தினார். ஏற்கிறோம். ஆனால் சிறுவர் இலக்கியங்கள் குட்டிகள் போட்டது போல் பெருகத்தானே வேண்டும். அதற்கு அரசு ஊக்கம் தர வேண்டாமா?

**இ**த்தகைய சிந்தனைகள் ஒருபுறமிருந்தாலும் மாநாடு அமோகமான வெற்றியாக அமைந்தது என்பதில் ஐயமில்லை. கோவை, விஜயா 'பதிப்பகம், குழந்தைகள் நூல்கள் கண்காட்சியை ஏற்பாடு செய்திருந்தது. வரவேற்புக் குழுத் தலைவர் செல்வ கணபதி தமது தொண்டர் படையுடன் அயராது உழைத்தார். மாநாட்டை உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்திலேயே நடத்தியதோடு, குழந்தை எழுத்தாளர்களை இங்குமங்கும் அழைத்துப் போக ஒரு நர்ஸரி பள்ளி பஸ்ஸையே ஏற்பாடு செய்திருந்தார் என்றால் எவ்வளவு முன் யோசனை, பார்த்துக் கொள்ளுங்கள்!

வாண்டுமாமா, தணிகை உலகநாதன் ஆகிய குழந்தை எழுத்தாளர்களுக்கும் பதிப்பகத்தினரின் பிரதிநிதியாக நியூ செஞ்சுரி புக் ஹவுஸுக்கும் பாராட்டுக் கேடயங்களை குழந்தை எழுத்தாளர் சங்கம் வழங்கிக் கௌரவித்தது.

தொழிலதிபர் நா. மகாலிங்கம், பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் சிட்டிபாபு, கோவை பி. எஸ். ஜி. நிறுவனங்களின் தலைவர் திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜுலு முதலிய பல பிரமுகர்கள் கலந்து கொண்டு சிறப்பித்த மாநாட்டின் வெற்றிக்கு நடுநாயகமான சூத்திரதாரியாக விளங்கியவர்... சொல்லவும் வேண்டுமா?

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா தான்!

— நமது நிருபர்கள்




# முச்சந்தியில் ஒரு மோதல்

'ஹாரன்கள்' தொடர்ச்சியாக அலறின.

மெயின் ரோட்டின் பக்கவாட்டிலிருந்து கிழக்காகப் பிரிந்த 'சாஸ்திரி சாலை' கிழக்குக் கோடியில்' சிவப்பு வர்ணம் பூசிய அந்தப் 'போஸ்ட் பாக்ஸு'க்கு' முன்புறமாக முற்றுப் பெற்று, அங்கிருந்து 'சம்பத் சாலை', 'குமரன் சாலை' — என்ற பெயர்களில் தெற்கு வடக்காக இரண்டாகப் பிரிந்தது. பெயருக்குத் தான் அது 'சாலை' என்றாலும் மிகவும் குறுகலாக— ஒரு லாரி எதிரே வரும்போது ஒரு சைக்கிளைக் கூடக் கீழே இறங்கித் தள்ளிக் கொண்டு செல்ல வேண்டிய நெருக்கடியான பாதை. அவ்வளவு நெருக்கடியான — ஏறத் தாழ ஒரு கிலோ மீட்டர் நீளமுள்ள சாஸ்திரி சாலையின் ஒரு பகுதியை அடைத்துக் கொண்டுதான் விதவிதமான வாகனங்கள் தம் சக்திக்கேற்ப ஓலமிட்டன.

சாஸ்திரி — சம்பத் — குமரன் சாலைகள் ஒன்றையொன்று சந்தித்துக் கொள்ளும் அந்த முச்சந்தியில் நான்கு 'ஜீப்' கள் — சாஸ்திரி முனையில் இரண்டும் — சம்பத், குமரன் முனைகளில் ஒவ்வொன்றுமாக நின்று மற்ற வாகனங்களின் போக்குவரத்திற்கு இடையூறு விளைவித்தன.

அந்த ஜீப்களுக்குப் பின்புறமாக வந்து இப்படித் தேங்கியிருந்த வாகனங்களின் ஒலி கேட்டும், ஜீப்கள் இம்மியளவும் அசையாது 'கல்லுளி மங்கன்' போல் அதே இடத்தில் நின்றிருந்தன.

''யோவ் டிரைவர்.... வண்டியை எடுய்யா...!''

''எவன்டாவன் சுத்த'....'யா இருப்பான் போலிருக்கே... எவனும் வந்து வண்டியை எடுக்க மாட்டேன்றாங்க...!''

—'சென்சார்' செய்யக் கூடிய வார்த்தைகளால் திட்டியபடி வெளியே பாய்ந்த பல வாகனதாரர்கள் அந்த ஜீப்களின் முன்புறத்தைப் பார்த்து நாக்கைக் கடித்துக் கொண்டனர் — அனைத்தும் அரசாங்க ஜீப்கள்.

''ஏங்க டிரைவர் சார்... கொஞ்சம் அப்படி ஓரமா இந்த ஜீப்களை நிறுத்திட்டா நாங்க போவதற்குச் சௌகரியமா இருக்குமே....!'' — என்று தணிந்து போய்ப் பேசினார் ஒருவர்.

''யோவ்... நாங்க அந்தப் பக்கந்தான்யா போகணும்... அவங்க அதுல ஜீப்களை நிறுத்திட்டா நாங்க எப்படிப் போறதாம்...?''

— சம்பத் சாலையில் ஜீப்களை நிறுத்த ஆட்சேபனைக்குரல் அவர்களுக்குள்ளேயே எழுந்தது. இதற்குள் ஒரு ஜீப்பின் டிரைவர் வெளியே குதித்து, கத்தினார்:

''ஏய்யா... இப்ப எங்களை என்ன செய்யச் சொல்றீங்க...?''



— கேள்வியே மிகவும் காட்டமாக வெளி வந்தது. 'கலெக்டரின் வண்டிக்கு டிரைவர்' என்ற மமதை மேலோங்க இருந்தது அவன் குரல்.

"சார் கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிப் பாருங்க... அந்தப் போஸ்ட் ஆபீஸ் ஓரமா கொண்டு போய் உங்க ஜீப்களை நிறுத்திட்டீங்கன்னு நாங்க சிரமமில்லாம போயிடுவோம்...!"

— ஜீப்களின் பின்னால் முதல்வராக நின்றிருந்த 'கார்' டிரைவர் முன்னால் வந்து கூறினார்.

"ம்... ஏய்யா... நாங்க என்ன இங்கேயே தங்கிடறதுக்காகவா வந்திருக்கோம்...? இந்த ஊர்ல கலெக்டர் 'சங்கரன் வீதி'க்குப் போகணும்... அந்த வீதிக்கு வழி தெரியலை... அதுதான் போஸ்ட் ஆபீஸில் விசாரிக்கலாம்னு வந்தோம்...!"

"என்ன, அரைமணி நேரமாகவா விசாரிச்சுட்டு இருக்கீங்க...?"

— பின்னாலிருந்து ஒரு குரல் முணுமுணுத்தது.

"உனக்கு அவசரம்னா வண்டியை 'ரிவர்ஸ்'ல எடுத்துட்டுப் போ... இங்கே ஏன் பொருமிக்கிட்டிருக்கே...?"

"வண்டியை ரிவர்ஸ்ல எடுத்துட்டுப் போறதா...? கிட்டத்தட்ட ஒரு கிலோ மீட்டர் தூரம் உங்கப்பன்தான்யா ஓட்டிட்டுப் போவணும்...!"

"வந்திருக்கிறது 'கலெக்டர்'ன்னு கொஞ்சங்கூட இங்கிதமில்லாம எவன்யா என்னைக் கேள்வி மேல கேள்வி கேட்கிறது...? ம்... அவர் வர்றவரைக்கும் 'கப்சிப்'னு வாயை மூடிட்டு இருங்க... இல்லே...!"

— டிரைவர் சகலரையும் மிரட்டும் பாவனையில் பேசினான்.

"ம்... இவனுக்கு என்ன திமிர், பார்த்தீங்களா...?"

"கலெக்டர் டிரைவரில்லை, இருக்கத்தானே செய்யும்...!"

— ஒவ்வொருவரும் அவன் காதுபடவே முணுமுணுக்க ஆரம்பித்தனர். டிரைவருக்கு இரத்தம் கொதித்தது. இருந்தாலும் அடக்கிக் கொண்டு,

"யோவ்... இப்ப என்னை என்ன செய்யச் சொல்றீங்க...? நாங்க சங்கரன் வீதி எங்கேயிருக்குன்னு தேடிட்டுத்தான் வந்தோம். வந்த இடத்துல போஸ்ட் ஆபீஸ் இருக்கவே 'டக்'னு விசாரிச்சோம்... அவ்வளவுதான். இது முடிஞ்சு நாங்க அப்பவே திரும்பிப் போயிருப்போம். ஆனா, வந்தது கலெக்டர் ஜீப்பாச்சே... ரொம்ப நாள் கழிச்சு இந்தப் பக்கம் வந்திருக்கோமே... விடுவாங்களா நம்ம ஜனங்க. பார்த்தவுடனே 'கப்'னு கலெக்டர் அய்யாவைச் சூழ்ந்துட்டு மனு கொடுக்க ஆரம்பிச்சுட்டாங்க... அதோ... அங்கே பாருங்க....!"

— டிரைவர் கைகாட்டிய பக்கம் எல்லோரும் திரும்பினார்கள்.

அந்த முச்சந்தியிலிருந்து சம்பத் சாலையில் சுமார் முந்நூறு அடி தூரத்தில் அந்தக் கூட்டம் திரளாகத் திரண்டிருந்தது.

"ம்... நிலைமை இப்படி இருக்க நாங்க என்ன சார் செய்வது...?"

— டிரைவரின் பேச்சு நியாயமாகப்பட்டது அனைவருக்கும்.

அவரவர்கள் தத்தமது வாகனங்களுக்குச் சென்று உள்ளே அமர்ந்து, வண்டிகளை 'ரிவர்ஸில்' ஒற்றுமையுடன் ஓட்ட ஆரம்பித்தனர்.

**சா**ஸ்திரி சாலையில் நின்றிருந்த எல்லா வண்டிகளும் (கலெக்டரின் ஜீப்களைத் தவிர) சென்ற பிறகு...

மெயின் ரோட்டில் வெகுவேகமாக வந்த போஸ்ட் ஆபீஸ் 'மெயில் வான்' 'சர்'ரென்று சாஸ்திரி சாலையினுள் அதே வேகத்தில் நுழைந்தது. அந்த 'வான்' டிரைவருக்கு விஷயம் கூற சாஸ்திரி முனையிலேயே சிலர் கை காட்டினர். 'மெயில் வான்' டிரைவருக்கு அவசரம். ஏற்கெனவே கால் மணி நேரம் லேட். இப்போது மணி 3.45. இன்னும் இங்கிருந்து ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள 'பிரஸ்பேட்' போஸ்டாபீஸ்"க்குச் சென்று 'கட்டுகளை' எடுத்துக் கொண்டு திரும்பி வந்து 'ஹெட்போஸ்டாபீஸில்' நான்கு மணிக்கு ஆஜர் ஆக வேண்டும்.

எனவே — யாரோ — எதற்கோ நீட்டிய கை நீட்டலை அலட்சியப்படுத்தினான்.

தூரத்திலிருந்தே 'மெயில் வான்' வருவதைக் கவனித்துவிட்ட அந்தப் போஸ்ட் ஆபீஸின் கடைநிலை ஊழியர், தம் ஆபீஸிலிருந்து ஏழெட்டு தபால் பைகளைக் கொண்டு வந்து போட்டுவிட்டு,

"யோவ் டிரைவரே... அந்தப் பக்கம்

**கா.சு. வேலாயுதன்**

வண்டியை எடுய்யா... மெயில் வான் வருது...!'' என்று ஜீப் டிரைவரை நோக்கி உரக்கக் கத்தினார்.

டிரைவர் சிறிதும் அசையவில்லை.

'இவன் என்னடா இவ்வளவு அதிகாரமா, கலெக்டர் ஜீப் டிரைவரான எனக்கு உத்தர விடுவது...?' — என்ற ஏளனம் கண்களில் தவழ, ஜீப்பிலிருந்து கீழே குதித்துத் தபால் ஊழியரை அலட்சியமாகப் பார்த்தான்.

''யோவ்... உன்னைத்தான்யா! சொல்றது காதுல விழலே...? உங்க நாலு வண்டியையும் எடுத்துட்டுப் போயி அந்தக் கடைசியில நிறுத்து... மெயில் வான் வந்தவுடனே திரும் பிப் போகணும்....!''

''டேய்... கனகா, ரங்கா, சுப்பா... இந்த 'போஸ்ட் ஆபீசர்' நம்ம வண்டிகளை எடுத்துத் தூரமா நிப்பாட்டச் சொல்றார்டா... ச்சே, ச்சே...... நான் த ப் பா சொல்றேன் பாரு 'உத்தரவு போடறாரு...' வாங் கடா...!''

— மற்ற வண்டி டிரைவர்களிடமும் கிண்டலாகக் கூறி அவர்களையும் துணைக்கழைத்தான் கலெக்டரின் டிரைவர். அதற்குள் 'மெயில் வான்' ஜீப்களின் பின்னால் வந்து நின்று ஹாரனை அலறவிட, அந்த ஜீப் டிரைவர்கள் பழையபடி அதன் அலறலைச் சிறிதும் கண்டு கொள்ளாமலிருந்தனர்.

''யோவ்... வண்டியை எடுக்கறீங்களா, இல்லையா....?''

''நாங்க ஏன்யா எடுக்கறோம்...? இதோ இப்ப எங்க கலெக்டர் வந்துடுவார்... அவர் சொன்ன பின்னாலதான் வண்டியையே எடுப்போம்... அதுக்கப்புறமா நீங்க என்ன செய்வீங்களோ செய்துக்குங்க...!''

''நாங்க சொல்றதுக்கெல்லாம் விதண்டா வாதமாப் பேசிட்டு இருக்கீங்க...? உங் களை...!'' — அந்த தபால் இலாகா கடைநிலை ஊழியர் ஏதோ கூற முற்படுமுன், 'மெயில் வானி'லிருந்து கோபத்துடன் குதித்த 'வான்' டிரைவர் அவர்களை நோக்கி வேகமாக வந்தார்.

''டேய் சோமாரிகளா... இப்ப வண்டிகளை எடுக்கப் போறீங்களா... இல்லே...''

— முஷ்டியை ஓங்கிக் கொண்டு அவனை அடிப்பது போல் நெருங்கினார்.

''வேண்டாம் சார்... விடுங்க.... கோபப் படாதீங்க...!''

— கடைநிலை ஊழியர் தடுக்க

''டேய் பேமாரி... என்னையாடா சோமாரின்னு சொன்னே... வந்தேன்னு கீசிடுவேன்டா... கீசிடுவேன்.... என்னை யாருன்னு நினைச்சே...?''

— துள்ளினான் ஜீப் டிரைவர்.

சண்டை ஆரம்பித்த இடத்திற்கு சப் போஸ்ட் மாஸ்டர் வந்தார். கூட்டம் கூடியது.

''டிரைவர் கடைசியா கேட்கிறோம்... தபால் எடுக்க நாழியாவுது. வண்டியை எடுக்கப் போறியா. இல்லையா?'' — எஸ். பி. எம். அழுத்தத்துடன் கேட்டார்.

''என்னய்யா பெரிய போஸ்ட் ஆபீஸ்...? நாளைக்கு இல்லாட்டா அதற்கும் மறுநாள் தபால்கள் அந்தந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்துடும்ங்கறது உறுதி... ஆனா கலெக்டரை நீங்க தினந்தோறும் இந்த வீதியில 'குறை' கேட்டுப் பார்க்க முடியுமா...? முடியாதே... அதனால அந்த 'மெயில் வானும்' பொது மக்களோட நலன் கருதி மூட்டைகளை ஏத்திட்டு 'ரிவர்ஸ்ல' போகட்டும்...! இல்லே... என்னை — சோமாரின்னு திட்டிட்டு அடிக்க வந்த இவன் என் கால்ல விழுந்து மன்னிப்புக் கேட்கட்டும்...!''

— கைகளை ஆட்டி, ஆட்டிப் பேசினான் டிரைவர்.

அப்போது கலெக்டர் தம் பரிவாரங்களுடன் அங்கே வர, அந்த முச்சந்தியில் கூட்டம் மும்மடங்காகியது.

''என்னப்பா...? என்ன பிரச்னை...?''

— கலெக்டர், கலெக்டருக்கே உரிய மிடுக்

கோடு வினவுடிரைவர்கள் ஒவ்வொருவரும் தபால் ஊழியர்களின் மேல் குற்றங்களை அடுக்க ஆரம்பித்தனர்.

கலெக்டர் கோபத்துடன் சொன்னார்: "ஆயிரம் இருந்தாலும் எஸ்.பி.எம். சார்... உங்க டிபார்ட்மெண்ட் ஆள் எங்க ஆளைத் தரம் கெட்ட வார்த்தைகளால் தாக்கிட்டு அடிக்க வந்தது மகா தப்பு... அந்த டிரைவரை அவமானப்படுத்தியது என்னை அவமானப்படுத்தியது போல்... அவனை அடிச்சா என்னை அடித்தது போல... அதனால..."

"அதனால என்ன செய்யணும்கறீங்க...? அவன்கிட்டே நாங்க மன்னிப்புக் கேட்கணுமாக்கும்....?"

"ஆமாம்... அப்படிக் கேட்கிறதுனால என்ன தப்பு...?"

—சாதுவான அந்த சப் போஸ்ட் மாஸ்டருக்குக் கூட ரத்தம் கொதித்தது.

"சாரி சார்... உங்க டிரைவரும் வாய்க்கு வந்தபடி எங்களையெல்லாம் பேசி அவமானப்படுத்தியிருக்கான்... அதையெல்லாம் கொஞ்சம் கூட இலட்சியம் செய்யாம நீங்க இப்படிப் பேசறது நல்லாயில்லே....! நீங்க உங்க 'பிரஸ்டீஜைப்' பார்க்கும் போது, நானும் எங்க டிபார்ட்மெண்டோட 'பிரஸ்டீஜைக்' கட்டிக் காத்தாக வேண்டும்...!"

—துடிப்புடன் கூறி நிறுத்தினார்.

"எஸ்.பி.எம்... நீங்க ஒரு ஐ.ஏ.எஸ்... அதிகாரிகிட்டே பேசறீங்கன்னு நினைவிருக்கா!"

அப்போது—

போஸ்ட் ஆபீஸின் ஃபோன் கிணுகிணுத்தது. சப் போஸ்ட் மாஸ்டர் ஓடிச் சென்று எடுத்தார்.

"சார்... நான் அனந்த்பூர் எஸ்.பி.எம். பேசறேன்...! ம்... சொல்லுங்க...!"

"... .... ... ..."

"மெயில் வேனு...? சார்.... அதனாலதான் இங்கே பெரிய பிரச்னை கிளம்பி ஒரே ரகளையா கிடக்கு... இங்கே கலெக்டரோட ஜீப் வந்து 'ட்ராபிக்' ஜாம் ஆக்கிடுச்சு... அவங்க ஜீப்களை எடுக்க மாட்டேன்றாங்க... அதை எடுத்தாத்தான் நம்ம 'வேன்' வந்து திரும்பி மறுபடி மெயின் ரோடுக்கு போக முடியும்.."

—எதிர் முனையில் பேசியவருக்கு விஷயத்தைச் சொன்னதோடு அங்கு நடக்கும் மோதல்களையும் விவரமாகக் கூறினார்.

"என்ன ரிவர்ஸ்லியா...? முடியாது சார்... சுத்தமா ஒரு கிலோ மீட்டர் தூரம் ரிவர்ஸ்ல போயி வண்டியில ஏதாவது 'ட்ரபுள்' ஆனா நம்ம டிரைவர் மேலே ஃபால்ட் வந்துடும்..!"

"... ..."

—போஸ்ட் மாஸ்டர் ரிஸீவரை டேபிளில் வைத்துவிட்டு வெளியே ஓடி வந்தார்.

"கலெக்டர் சார்... உங்களை ஹெச்.ஓ.விலிருந்து ஏ.எஸ்.பி. கூப்பிடறார்.... வந்து போனை பேசுங்க...!"

— கலெக்டர் அலட்சியமாக அவரைப் பார்த்தார். பின் பார்வையைத் தமது பி.ஏ.வின் பக்கம் திருப்ப, அதன் அர்த்தத்தை உணர்ந்து கொண்ட பி.ஏ. போஸ்ட் ஆபீஸில் ஃபோன் இருக்குமிடம் நோக்கி ஓடினார்.

"ஹலோ ... ... சார் நான் கலெக்டர் காசிநாத்தோட பி.ஏ. பேசறேன்"

— ரிஸீவரை எடுத்த எடுப்பில் அவர் கூற எதிர்முனையில் 'அடிஷனல் சூப்பிரிண்டெண்ட் ஆப் போஸ்ட் ஆபீஸ்' இரைந்தார்.

"... ..."

— எதிர்முனையில் போன் வைக்கப்படும் ஒலி சப்தமாகக் கேட்டது. பி.ஏ. கலெக்டரிடம் சென்று விஷயத்தைக் கூறினார்:

"அவங்க... 'அவங்களோட இலாகா' மினிஸ்டர்கிட்டே போறதாப் பேசிக்கிறாங்க சார்...!"

"போகட்டுமேய்யா... அந்த மினிஸ்டர் தான் பெரிய கொம்பா...? நமக்கு ஒரு மினிஸ்டரும் தெரியாதா என்ன...? எனக்கும் நம்ம மினிஸ்டர் ஆடியபாதத்துக்கும் என்ன உற



புகைப்படம்: அழ. காசி. விஸ்வநாதன்



**ராமு: எனக்கும் என் மானேஜருக்கும் இடையில் உறவு ஹவுஸிங் போர்டு கட்டிய வீடு மாதிரி ஆயிடுச்சு!**

**துரை: அடக்கடவுளே! அதுக்குள்ளயா விரிசல் விழுந்திடுச்சு?**

— ஆர். சம்பத்குமார்.

[redacted]

வுன்னு இவன்களுக்கு என்னய்யா தெரியும்...?''

— விட்டுக் கொடுக்காமல் கறுவினார் கலெக்டர்.

இளைஞன் ஒருவன் கலெக்டரிடம் பவ்யமாகச் சொன்னான்: ''ஏன் சார்... அதிகாரிகளே இப்படி சண்டை போட்டுட்டுப் பிடிவாதம் பிடிச்சுட்டு இருந்தா எப்படிங்க...? ஏனுங்க கலெக்டர் சார், நீங்கதான் கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணி வண்டியை எடுங்களேன்...! நான் இன்னைக்கு போஸ்ட் பண்ணின 'பப்ளிக்சர்வீஸ்கமிஷன்' அப்ளிகேஷன் நாளைக்குப் போய்ச் சேரணுமே...!''

''ஏய்யா... எங்கோ போன என்னை இங்கே நிறுத்தி வச்சு, உங்க குறைகளைச் சொல்லி அழுததோட மனுக்களையும் கொடுத்தீங்களே... அப்போ எங்கே போச்சு உங்க புத்தி....?

— கலெக்டரின் மனத்தில் உள்ளதைப் படம் பிடிப்பதுபோல் பேசினார் சப் — கலெக்டர்.

மறுபடியும் —

போன் மணி அடித்தது. எஸ்.பி.எம். எடுத்தார், பேசினார்.

சார் உங்களுக்கு மினிஸ்டர்கிட்டேயிருந்து ட்ரங்கால்... வாங்க...!'' — கலெக்டரை அங்கிருந்தபடியே அழைத்தார் எஸ்.பி.எம்.

கலெக்டர் 'மினிஸ்டர்' என்றவுடன் பி.ஏ. பக்கம் திரும்பாமலே போனை நோக்கி ஓடினார்.

சார் நான் காட்டூர் கலெக்டர் காசிநாத் பேசறேன்...''

''யாரு... கலெக்டர் சாரா... நீங்க ரொம்பப் பிரஸ்டிஜ் பார்ப்பவராமே... அப்படியா...? இப்பப் பேசறது யாருன்னு தெரியுமா...?''

''இ...இ... தெரியலேங்க... அமைச்சர்னு சொன்னாங்க...''

— அவரின் பதிலுக்கு எதிர்முனை சிறிது நேரம் சிரித்தது.

''ஏம்ப்பா கலெக்டர்...! மினிஸ்டர் கூப்பிடறார்ன்னு உடனே ஓடி வந்துடுவீங்க... யாராவது ஆபீஸர் நியாயம் கேட்கக் கூப்பிட்டா, பேச வராம கௌரவம் பார்ப்பீங்க... அப்படித்தானே...?''

''இ... இ.''

''நான் மினிஸ்டர் பேசலே... மினிஸ்டர் ஆடியபாதத்தோட பி.ஏ. பேசறேன்... மினிஸ்டர் சீஃப் மினிஸ்டரை வரவேற்க அவசரமா ஏர்—போர்ட்டுக்குப் போயிருக்கார். போகும் போதுதான் போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் போன்ல கூப்பிட்டுப் பிரச்னையை அவர்கிட்டே விண்டு விண்டு வச்சுட்டார்... அவர் சென்ட்ரல் கவர்ன்மெண்ட் மினிஸ்டர்கிட்டவே போறேன்னு சொன்னதை நம்ம மினிஸ்டர்தான் தடுத்திட்டார். இப்ப மினிஸ்டருக்கு உங்க மேலே ரொம்ப கோபம். ஏன் சார்.... நீங்க யாரு கூட மோதறீங்கன்னு கொஞ்சமாவது யோசிச்சிருக்க வேண்டாம்...?''

''அதில்லேங்க... அந்த 'வான்' டிரைவர்தான் ஏதேதோ தகாத வார்த்தைகள்ல திட்டிட்டு நம்ம டிரைவரை அடிக்க வந்துட்டான்... அது நமக்குக் கௌரவக் குறைச்சலாச்சேன்னு...!''

''உங்களோட பிரஸ்டிஜைத் தூக்கிக் குப்பையில போடுங்க... நம்ம மாநில ஆளுங்கட்சிக்கும் மத்தியில் ஆளுங்கட்சிக்கும் ரொம்ப காலமா நெருக்கமான உறவு இருந்துட்டு வருது... நம்ம கட்சி அவங்களை ஆதரிச்சுட்டு வருது... அதனாலே அவங்களும் பெருந்தன்மையோட நம்மைத் தட்டிக் கொடுத்துட்டு வர்றாங்க.. அதுமட்டுமில்லாம தேர்தல் நெருங்கிடுச்சு... எப்பவும் போல நம்ம தலைவர் அவங்க கூட 'சுமுகமா' தேர்தல் உடன்படிக்கை செய்யணும்னு ஆசைப்படறாரு.. இந்த நிலைமையில, நீங்க எதிர்த்த போஸ்டல் டிபார்ட்மெண்ட் ஆளுங்க நேரா அவங்க மினிஸ்டர்கிட்டே போயிருந்தா அது கட்சி உறவுகளைப் பாதிச்சிருக்கும். சீஃப் மினிஸ்டர் உங்களை 'சஸ்பெண்ட்' பண்ணியிருப்பார்... இல்லே, எங்காவது தண்ணியில்லாக் காட்டுக்குத் துரத்தியிருப்பார்...!''

—போனில் வார்த்தைகள் சூடாக ஒலிக்க கலெக்டரின் முகம் எண்கோணலாக மாறிப் பாறையாக இறுகிக் கொண்டே வந்தது.

''அதனாலே கலெக்டர் சார்... பேசாம அவங்களை எதிர்க்காம — உங்க பிரஸ்டிஜ் பார்க்காம போயிட்டேயிருங்க... அவங்ககிட்டே நீங்க மன்னிப்புக் கேட்டாலும் கூட தப்பேயில்லேன்னு 'மினிஸ்டர்' சொல்லிட்டுப் போயிருக்கார்... என்ன... செய்யறீங்களா...?''

— எதிர்முனையில் குரல் கிண்டலுடன் ஒலித்தது.

கலெக்டர் 'டக்'கென்று போனை வைத்தார். அவர் முகத்தில் ஈயாடவில்லை. வேகமாக ஜீப்பை நோக்கி நடந்தார்.

''வண்டியை எடுங்கடா...!'' —டிரைவரை நோக்கி ஆத்திரத்துடன் கூற கூட்டம் சற்றுத் தள்ளி நின்று வேடிக்கை பார்த்தது.

''சார்... சார்... இந்த 'மனு'க்களையெல்லாம் வண்டியிலே வையுங்க.''

—தாசில்தார் சப் கலெக்டரிடம் ஓடிவர,

''அதை இந்த ஜனங்ககிட்டேயே திருப்பி எறிஞ்சுடுய்யா... அவங்க தபால் பெட்டியிலேயே போட்டுக் குறைகளைத் தீர்த்துக்கட்டும்...!''

— கலெக்டர் கோபமாகக் கத்தி விட்டு 'ஜீப்'பில் ஏறிக் கொண்டார்.

அவருடைய பரிவாரம் புறப்பட்டது.

## அருள்மிகு சபாநாயகர் (ஸ்ரீ நடராஜர்) கோயில்
## திருப்பணிக் கமிட்டி சிதம்பரம்

நமது பாரத தேசத்தில் சிறப்பாகக் கோயில் என்றாலே சிதம்பரம் என வழங்கும் தில்லையம்பதியே ஆகும். அருள்மிகு சிதம்பரம் ஸ்ரீநடராஜா கோயில் திருப்பணி வேலைகள் 1975 முதல் தொடங்கி அரசுமான்யம், பிற ஆலய உபரிநிதி மாற்றம். பொது மக்கள் நன்கொடை மூலமும் உபயதாரர்கள் மூலமும் இன்றுவரை ரூ.49 லட்சம் செலவில் வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு ராஜகோபுரம் திருமாளிகை பத்தி முதலிய வேலைகள் முடிந்து 11.2.87ல் மஹாகும்பாபிஷேகமும் நடந்தேறியது. மேலும் வெளித்திருமதில் நிரந்தரமின் இணைப்பு மற்றும் சில வேலைகள் தொடர்ந்து செய்யப்பட்டு வருகிறது. இவைகளை முடிக்க மேலும் சுமார் ரூ.15 லட்சம் தேவைப் படுகிறது.

இதைக் கண்ணுறும் அன்பர்கள் திருமதில், நிரந்தர மின்இணைப்பு மற்றும் முடிக்க வேண்டிய திருப்பணிக்கு பொருளுதவி செய்து தில்லை ஸ்ரீநடராஜா பெருமானின் திருவருளைப் பெறக் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு,

| | | |
|---|---|---|
| தலைவர் | : | திரு ஆர். ராமலிங்கம் பிள்ளை     பொது தீட்சதர்கள். |
| செயலாளர் | : | திரு வா. பாலதண்டாயுதம் பிள்ளை |
| பொருளாளர் | : | திரு ஆர். பாலசுப்ரமணியம் செட்டியார் |
| துணைச் செயலாளர் | : | திரு கே. சுவாமிநாதன் மற்றும் கமிட்டி அங்கத்தினர்கள் |

### திருப்பணிக்கு நன்கொடை அனுப்பும் முகவரி

திரு வா. பாலதண்டாயுதம் (செயலாளர்),
திருப்பணிக் கமிட்டி அலுவலகம்,
ஸ்ரீ நடராஜர் கோயில்,
சிதம்பரம் — 608 001.

குறிப்பு: வருமான வரி விலக்கு உண்டு. நெ. 88, வருமானவரிச் சட்டம் 1961 (43/1961)

## நீங்கள் கேட்டவை — தராசு

# சுறுசுறுப்பாகச் செயலாற்றுகிறாரே ஆர்.எம்.வீ.?

* பா. சபா. தூத்துக்குடி.

? MGR 4777 பற்றிய கேள்விக்கு 'வெட்கக்கேடு' என்று பதிலளித்துள்ளீரே? பாரத நாடு என்று பரந்த கண்ணோட்டத்தில் பாராமல் தமிழ்—தமிழ்நாடு என்று நீர் கூடக் குறிப்பது வேதனைக்குரியது அல்லவா?

! எம். ஜி. ஆருக்கு மேற்படி நெம்பர் பெறப்பட்டது பாரத நாடு என்ற பரந்த மனப்பான்மையால் அல்ல. M.G.R. என்ற பெயர் வர வேண்டும்; சென்னையில் ஓடும் மற்ற கார்களிலிருந்து இவ்விதத்தில் தனித்தன்மை பெற்று விளங்க வேண்டும் என்ற அற்ப ஆசையால் தான். விதிமுறைகளை மீறுவது அதுவும் முதல்வரே மீறுவது ஒருமைப்பாடாகாது.

* ஜி. நீலா, மன்னார்குடி.

? தமிழர்களுக்குப் போதுமான தன்னாட்சி வழங்கப்பட்டிருக்கிறதா என்பதைக் கவனியாமல் பிரதமர் இலங்கை ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு விட்டதாக முன்னாள் செயலாளர் ஏ. பி. வேங்கடேசுவரன் குற்றம் சாட்டியிருக்கிறாரே...?

! இந்திய—இலங்கை ஒப்பந்தத்தில் உறுதி கூறப்பட்டுள்ள, உரிமைகள் ஈழத் தமிழர்களுக்கு வழங்கப்பட்டாலே போதும்! ஆனால் அதற்கே கூட ஆபத்து வந்து விடும் போலிருக்கிறதே! பாரதப் பிரதமர் கண்டிப்புக் காட்டவில்லையானால் ஜெயவர்த்தனா மிளகாய் அரைத்து விடுவார்!

* சி. மணி, புத்தாநம்பட்டி.

? 'இந்திய கிரிக்கெட் அணியின் கேப்டனாக நீடித்தாலும் நீடிக்காவிட்டாலும் இந்திய கிரிக்கெட் அணியிலேயிருந்து விளையாடுவேன். நாடுதான் முக்கியம்' என்று கபில் தேவ் கூறியுள்ளாரே, அதுபற்றி...

மிகவும் உயர்ந்த, வரவேற்கத்தக்க பேச்சு தான். ஆனால் இந்த உன்னத நோக்கில் வெங்சர்க்கார் தலைமையில் டில்லி டெஸ்ட்டில் இந்திய அணி விளையாடுவதாகத் தோன்றவில்லையே! முதல் இன்னிங்ஸில் 75க்கு ஆல் அவுட்! யாரிடம் சொல்லி அழ!

* மேலை பழ. நாகப்பன், சென்னை — 41.

? கபில்தேவை அம்போ என்றுவிட்டுவிட்டு வெங்சர்க்காரைக் கேப்டனாக அதுவும் இரண்டு டெஸ்ட்களுக்கு மட்டும் நியமித்திருப்பது பற்றி...?

! சில காலம் சென்று கேப்டனை மாற்றுவதில் தவறில்லை. ஆனால், 'இரண்டு டெஸ்ட்களுக்கு கேப்டனாக இரு; அப்புறம் பார்க்கலாம் என்று கூறுவது அபத்தம். புதிதாக வேலைக்கு வருகிற ஒருவனை நடத்துவது போலவா வெங்சர்க்காரை நடத்துவது? அவருடைய ஆற்றல்கள் ஏற்கெனவே தேர்வுக் குழுவுக்குத் தெரிந்தவைதாமே? மேலும் மோகீந்தருக்கு ஆசை காட்டி வரச் சொல்லி விட்டு மோசம் செய்ததும் ரவிசாஸ்திரிக்குக் கல்தா கொடுத்துவிட்டுப் பிறகு வெற்றிலைப் பாக்கு வைத்து அழைத்ததும் தேர்வுக் குழுவின் குழப்ப சிந்தனையையே உணர்த்துகின்றன.

* திருப்பு முனை



* எஸ். எஸ். டி. ராஜன், சிறுதையூர்.

? தேங்காய் சீனிவாசன் நடித்த படங்களில் தங்களை மிகவும் கவர்ந்தது எது?

! "காசேதான் கடவுளடா" என்கிறார் நண்பர். நானும் டிட்டோ போடுகிறேன். ஆனால் சினிமாவில் புகு முன்னர் சீனிவாசன் நடித்த சில நாடகங்களை என்னால் மறக்க முடியவில்லை. குறிப்பாக, 'பிரசிடெண்ட் பஞ்சாட்சரம்; எஸ். வி. சகஸ்ரநாமம் டைரக்ஷனில் கலைஞரின் 'வெள்ளிக்கிழமை.' சினிமாவில் மெட்ராஸ் பாஷையை முதன் முதலில் புகுத்தியவர் அவர்தான் என்றாலும் அப்புறம் அவரை ஒரு ஸ்டீரியோ

டைப் ஆக்கிவிட்டது திரை உலகு.

* இரா. இரவீந்திரன், பூதலூர்.

? வ. உ. சி. யின் வழித்தோன்றல்கள் இருக்க, அவருடன் இணைந்து செயலாற்றிய வர்கள் இருக்க, தொலைக்காட்சியில் சிவாஜி கணேசனை வைத்து ஒளிபரப்பப்பட்ட நிகழ்ச்சி நன்முகவா இருந்தது?

! "கப்பலோட்டிய தமிழனுக்குப் பெருமை சேர்க்க சிவாஜி கணேசன் மனப்பூர்வமாக விரும்பிச் செயல்பட்டிருக்கலாம். ஆனால் நிகழ்ச்சியில் வ. உ. சி. பின்னணிக்குத் தள்ளப்பட்டு சிவாஜியே முன் நின்றார் என்றால் அது சிவாஜியின் தவறல்ல; நிகழ்ச்சித் தயாரிப்பாளர்களின் குற்றமே. சிவாஜியை யும் ஒதுக்காமல், வேறு பலரையும் சேர்த்துக் கொண்டு, பல இடங்களுக்கும் சென்று படம் பிடித்திருந்தால் அற்புதமாக இருந் திருக்கும்.

* எஸ். ராம்கோபால், சென்னை — 33.

? சினிமா நடிகர், நடிகையர் சம்பந்தப்பட்ட கேள்விகளுக்கு நீங்கள் ஏன் பதிலளிப்ப தில்லை?

! அது கேள்விகள் அமைவதைப் பொறுத்த விஷயம்தான். உதாரணமாக தேங்காய் சீனி வாசனைப் பற்றி ஓராயிரத்துக்கு மேல் கேள்வி கள் குவிந்தன; ஆனால், சக்தி நாடக சபாவை வெற்றிகரமாக நடத்தியவரும், கட்டபொம் மன், கர்ணன் போன்ற படங்களுக்கு வசன மெழுதித் திரை உலகில் ஒரு திருப்பு முனை யாக விளங்கச் செய்தவருமான சக்தி கிருஷ்ணசாமி பற்றி விரல் விட்டு எண்ணும் படி ஒரு சிலர்தான் கேட்டனர். மனம் சலித் துப் போயிற்று.

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? அமைச்சராகப் பொறுப்பேற்றதும் சுறுசுறுப்பாகச் செயலாற்ற ஆரம்பித்து விட் டாரே ஆர். எம். வீ.?

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

இரா. இரவீந்திரன்,
கோவில் பத்து,
பூதலூர் — 613 602.

! அவருடைய சுறுசுறுப்பு வீட்டுச் சொந் தக்காரர்கள் அனைவரையும் கதிகலங்க அடித் திருக்கிறது. ஆனால் ஆர். எம். வீ.யோ, 'சரி யாகப் புரிந்து கொண்டால் புதிய விதிகளை யும் விதி முறைகளையும் சொத்து வரி கட்டுகிறவர்கள் வரவேற்கவே செய்வார் கள்' என்கிறார். அதோடு லஞ்ச ஊழலையும் குறைக்குமானால் நல்லது. பார்ப்போம். அநீதி என்று தெரிந்தால் இருக்கவே இருக் கிறது நீதிமன்றம்!

* பிரியா பாரதி, போடிநாயக்கனூர்.

? 'ஸதி என்பது மத உரிமை' என்று கூறி ஆதரவு தரும் ஒரு சங்கராச்சாரியாரின் வாக்கு குறித்து...

! மற்ற பல சங்கராச்சாரியார்களுக்கும் தலைகுனிவையும் தர்ம சங்கடத்தையும் ஏற் படுத்தும் அபத்தமான போக்கு.

* பாலை. அசோக், திருச்சி.

? தமிழ்நாட்டில் வாழ்க்கைக்கேற்றவாறு கல்வித் திட்டத்தை அமைக்க வேண்டும் என்று பொன்னையன் கூறியுள்ளாரே?

! குமாஸ்தா பட்டாளங்களை உருவாக்கும் பட்டதாரி படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துத் தொழில் கல்விக்கே முக்கியத்துவம் தரவேண்டியது கம்ப்யூட்டர் யுகத்தில் அத்தியாவசியமானது. வேலையில் லாப் பட்டதாரிகள் எண்ணிக்கை அதி கரித்துக் கொண்டே போவதைத் தவிர்க்க இது ஒன்றே வழி. பொன்னையனின் முயற்சி வெற்றி பெற வாழ்த்துவோம்.


* உன்னை நோக்கு


* இவர் தவறல்ல




* ஸ்டீரியோ டைப்




* மிளகாய் அரைப்பார்!

வட்டமேஜை

# ஆஹா, என்ன நேர்மை!

☐ பரிதாபத்துக்குரிய, 'புத்திர சோகப்பட்ட ராம னைப் பற்றிப் படித்தவுடன் கண்கள் குளமாயின. சத் துணவுத் திட்டத்திலும், முதியோர் பென்ஷன் திட்டத் திலும் நடக்கும் 'இல்லுமுல்லு'களைக் கண்டு கொள் ளாத அரசு — ராமன் போன்ற எளியவர்கள் விஷயத் தில்தான் சட்டத்தை எழுத்துப் பிசகாமல் கடைப்பிடிக் கிறது! ஆஹா! என்ன நேர்மை!

மன்னார்குடி. ஜி. நீலா.

☐ ஐந்து ரூபாய் சாதனைக்கு ஆயிரம் ரூபாய் செல வழித்து விழா நடத்த அரசுக்குச் சட்டங்கள் இடம் தரலாம். அதேசமயம் மகனைப் பறி கொடுத்து, தற் போது வறுமைக்குத் தன் குடும்பத்தையே பலி கொடுக்கும் நிலைமைக்குத் தள்ளப்பட்ட ராமனுக்கு நஷ்டஈடு தர, சட்டம் இடம் கொடுக்கவில்லை என் பதைப் படிக்கும்போது வெறுப்பும் வேதனையும்தான் வருகிறது.

சிங்காரப்பேட்டை, என். சோமகன்.

☐ "இன்னிக்கு நாம் சோறு சாப்பிடப் போறோம்" என்ற நிலையே ஒரு குடும்பத்தில் அதிசயமாக இருக் கிறது. வேலை செய்து கூலி வாங்கி அரிசி வாங்கிவர மகிழ்வுடன் சென்ற ராமனின் உற்சாகமும் அதன் முடிவும் படித்த போது எனது கண்கள் நீரால் நிறை விட்டன.

மேட்டுப்பாளையம், பி. ஏ. வதூத்.

☐ 'காளான்' ஒதுக்கப்பட வேண்டிய பொருள் என்றுதான் இதுவரை எண்ணியிருந்தேன். ஆனால் அது (காளான்) உடல் ஆரோக்கியத்தைத் தரும் சத்து ணவு என்பதைக் கல்கியின் மூலம் அறிந்து வியந் தேன்!

சென்னை — 16. அர. மணிவண்ணன்.

☐ ஒவ்வொரு மனிதனுடைய உள்ளறிவும் சரி யானபடி தூண்டிவிடப் படவேண்டும் என்ற ஜே. கே. யின் வழியில் மாணவர்களுக்கு முழுச் சுதந்திரம் அளித்து, ஆர்வம் இருக்கும் துறையை அறிந்து, அதற் கேற்ப அவர்களை ஊக்குவித்து வரும் ஊட்டி புளூ மவுண்டன் பள்ளி ஒரு வித்தியாசமான பள்ளி. ஆற்ற லும், தன்னம்பிக்கையும் நிறைந்த மனிதாபிமானம் மிக்க மாமனிதர்களை அது உருவாக்கும் என்று நம்பு கிறேன்.

பண்ருட்டி, எஸ். தமீஜுதீன்.

☐ இந்தியாவில் பிறந்த ஏழைகளுக்குச் சந்தோஷம் தருவது சினிமா ஒன்றே. இப்படி இருக்கும் வேளையில், நீலகிரி மாவட்டம் இம்பட்டி கிராமப் பெண்கள் ஊர்க் கட்டுப்படி சினிமாவே பார்க்கக் கூடாது என் பதில் இதைக் காட்டிலும் கேவலமும், கொடுமையும் வேறு எதுவும் இருக்க முடியாது. பெண்களுக்குச் சம உரிமை என்று பட்டணத்தில்தான் பேசிக் கொள் கிறோம். பட்டிக்காட்டில் அந்தக் காற்றுக் கூட வீசவ தில்லை என்பது நன்கு தெரிகிறது.

வாழ்குடி. எம். ராஜேந்திரன்.

☐ போன வார இதழில் ராஜராஜசோழன் அளித்த "தடம் புரண்ட ரயிலில் தப்பிப் பிழைத்தேன்" என்ற பேட்டியில் எனக்குப் பிடித்த இரண்டு வரிகள் நம்மு டைய தபால் தந்தி இலாகாவின் 'சுறுசுறுப்பை' வெளிப் படுத்திய கடைசி இரண்டு வரிகள்தான்.

சென்னை — 61. ஆர். ராமச்சந்திரன்.

☐ காதலுக்கும் 'கரம்' முக்குமே கதைகளில் முக்கியத்துவம் தரப்பட்டு வரும் இந்தக் காலத்தில், ஒரே ஒரு துண்டை மையமாக வைத்து, மிகவும் இயல் பாக ஏழ்மையைப் படம்பிடித்துக் காட்டிய அபூர்வனின் 'ஏமாற்றம்,' உண்மையிலேயே ஓர் அற்புதமான சிறு கதைதான்!

சென்னை — 11. ஜி. ராணிகுமார்.

☐ பொன்வண்ணனின் 'குண்டு வீச வந்தவன்' சிறுகதைதான் இதுவரை வெளியான போட்டிக் கதை களிலேயே தலைசிறந்தது எனக் கருதுகிறேன்.

ஓர் ஏழைத் தொழிலாளிக்கே உரித்தான அப்பாவித் தனம், அறியாமை, ஆற்றாமை, இயலாமை ஆகிய அனைத்து உணர்வுகளையும் துல்லியமாகப் பிரதிபலித்த அபூர்வனின் 'ஏமாற்றம்' சிறுகதையை அணு அணு வாகப் படித்து ரசித்தேன்!

சென்னை — 15. சைதை வி. முரளி.

☐ 22.11.87 இதழில், வேளாண்மைப் பட்டதாரி கள், வேலையில்லாமல் இருப்பதைப் பற்றி ஒரு கேள்வி பதில் வந்திருந்தது. வேளாண்மைப் பட்டதாரிகள் வேலையில்லாமல் இருப்பதற்குக் காரணங்கள்:

1. வேளாண்மைத் துறையில் பல புதுத் திட்டங் கள் இருந்தும் அவை செயல்படுத்தப்படாமல் இருப் பது.

2. தமிழ் தெரிந்த பட்டதாரிகள் இருந்தும், மற்ற மாநில வேளாண்மைப் பட்டதாரிகள் வேளாண் அலு வலர்களாக நியமிக்கப்பட்டிருப்பது (அவர்கள் எப் படி நம் விவசாயிகளிடம் செய்திகளைச் சொல்வார்கள் என்பது வியப்பு).

3. Assistant Agricultural Officer (AAO) ஆகப் பணிபுரியும் Diploma படித்துள்ளவர்கள் பத்து சத விகிதம்தான் Agricultural Officer ஆகப் பதவி உயர்வு பெற முடியும் என்னும் விதியை மீறி, இப்போது கிட்டத்தட்ட இருபத்தேழு சதவிகிதம் A.A.O. க்கள் A. O. க்களாகப் பதவி உயர்வு பெற்றிருப்பது (எப் படி என்று தெரியுமா?)

கோவை, கே. தியாகராஜன்,

(தலைவர், தமிழ்நாடு விவசாய மாணவர்கள் யூனியன்)

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 4 3 1 5 4 3, 4 3 4 1 5 7.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 4 7 3 3 8 9.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 650/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.





# இப்போது ராயல் ஹவுஸ்ஃப்ளோரிங் செய்து பாருங்கள்!

ராயல் ஹவுஸ். இதில் உள்ள சிறப்புகள், ஒருவேளை, மற்ற ஃப்ளோரிங்கில் கிடைக்கக் கூடும். இதனை எளிதாக பரப்பலாம்— தொல்லை இல்லை. தொந்தரவு கிடையாது. சில மணி நேரங்களில் பரப்பில் அழகு பாவுகிறது. சுலபமாக பராமரிக்கலாம்— கறை படியும் பயமே இல்லை.

இதன் மீது நடப்பதே சுகம்— மெத்தை போன்ற இதம். விரும்பும் டிசைன்கள்— பார்த்தால் பரவசம். மேலும் செலவும் மிச்சம். அத்துடன் அதிநவீனம்— ஜெர்லண்ட் இதனை வெளிநாடுகளில் அறிமுகப்படுத்தியது. இப்போது ராயல் ஹவுஸ் இதனை இந்திய நாட்டிற்கு கொண்டு வந்துள்ளது.




**எளிதாக பாவலாம், எழிலைத் தூவலா**

ராயல் குஷன் வினைல் ப்ராடக்ட்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
ராம்கிருபா, 25, பரேக் ஸ்ட்ரீட், பிரார்த்தனா சமாஜ், பம்பாய்-400 004 ● 415, வொர்ல்ட் டிரேட் சென் ... பாராகம்பா லேன், புது டில்லி-110 00

ULKA-RH-1A-86 TAM